## ஆசிரியர் குழு

1. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்
காசிச் சர்வகலாசாலை, காசி.

3. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.

4. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர், தென்காசி.

5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
20. நுங்கம்பாக்கம் ஹைரோடு சென்னை - 6.

6. திரு. ம. ரா. சண்முகசுந்தரம் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
இந்து சமய அறநிலைய உதவி ஆணையர் (ஓய்வு).
"வள்ளுவர் குறடு" மதுரை.

---

T. M. குமாரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை

உ.

திருச்செந்திலாண்டவன் துணை

# சந்தா நேயர்களுக்கு ஓர் அறிவிப்பு

சார்வரி ஹூ மாசி மாதத்திலிருந்து (மார்ச்சு-1961) சந்தா நம்பர் புதுப்பிக்கப் பெற்றிருக்கிறபடியால், இனி இந்த அலுவலகத்துக்கு அனுப்பும் மணி யார்டர் தபால் முதலியவைகளில் புது நம்பரையே குறித்து எழுதும்படிக் கேட்டுக்கொள்ளப்படு கிறார்கள்.

ஆபீஸ் சிப்பந்திகள் சந்தா நம்பர் புதுப்பிக்கும் பணியில் ஈடுபட்டிருந்ததின் காரணமாக 'குமர குருபரன்' பங்குனி இதழ் அனுப்புவதில் கால தாமதமேற்பட்டதற்கு வருந்துகின்றோம்.

நிர்வாக ஆசிரியர்

15—3—61

உ

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 12 ‖ சார்வரி-ஆ பங்குனித் திங்கள் 1-ம் உ [14-3-61] ‖ இதழ் 3

# சிதம்பரச் செய்யுட் கோவை

தருமையாதீனம் முதுபெரும்புலவர்,
மாணிக்கவாசகன்.
(முத்து. சு.)

[ கட்டுரை 44 ]

சிவபெருமான் கற்றைச்செஞ் சடைமேல் ஒற்றைவெண் பிறை உடையன், அதனால் அச்சடையைத் 'திங்கட்சடைக் கற்றை' என்பர் பெரியோர். தேவர்களைப் 'புத்தேள்' என்று வழங்குவர். அதன் காரணம் புலப்படவில்லை. மக்கட்டிரளுக்குத் தேவர் திரள் புதிய திரள் ஆகும். ஆதலின், புதுதிரள் என்பது புத்தேள் என மருவிற்று என்று அறிஞர் ஒருவர் கூறினர். அதன் பன்மையாகப் 'புத்தேளிர்' என்னும் செய்யுள் வழக்குமுளது. 'புத்தேளிர் கோமான் நின் திருக்கோயில் தூய்மெழுகேன்' என்னும் திருவாசகத்தை அறிக.

'திங்கட்சடைக் கற்றைப் புத்தேள்' என்பது ஈண்டுச் சிவபிரானைக் குறித்தருளினர் ஆசிரியர் குமரகுருபரர். தேவாதி தேவன் என்னும் பொருளில் இங்கு அது நிற்கின்றது. 'தேவன்' என்று கொள்ளல் குற்றமாகும். அம்முழு முதல்வனது திரு-மார்பில் தலை(கள் வரிசையாகக் கோக்கப்பட்ட) மாலை தொங்கு கின்றது. தலைமாலை தலைக்கணிந்தவன். அது திருமார்பில் தொங்கி அசைகின்றது எனலாம். அதனின் வேருக மார்பிலும் தலைமாலை பூண்டுள்ளான் சர்வசங்காரகாரணனுகிய சிவசங்கரன்.

அத்தலைகள் உயிருள்ளபோது தமக்குரியதன்மை முழுதும் குன்ருதவாறு விளங்கும் கண்களைக் கொண்டிருந்தன. உயிரின் நீங்கிய உடற்குறையாய் நின்றகாலத்திலும் அத்தலைகளில் விளங்கும் கண்கள் பசுமை அருமல் உள்ளனவாம். அதனுல், 'பைங்கட்டலைகள்' எனப்பட்டன. அத்தலைகள் அத்திருமார்பில் விளங்குகின்றன. 'நகுதல்' என்னும் சொல் விளங்குதல் சிரித்தல் முதலிய பல, பொருள் பயக்கும். சிரிக்கும் போது பற்கள் விளங்குதல் பற்றியே 'நகுதல்' என்றனர். 'நகை' என்னும் பெயரும் விளக்கம் பற்றியே உண்டாயிற்று. விளக்கம் இல்லாதவற்றை 'நகை' என்னுர்.

அத்தலைகள் பலவற்றின் நகையும் திருமாலுக்கும் பிரம னுக்கும் தோன்றிற்று. நகுகின்ற பலதலைகளையும் யார் யாருடைய தலைகள் என எண்ணினர் இருவரும். நமக்குமுன் இருந்த மாலயன் தலைகளே இம்மாலைத் தலைகள் என்று துணிந் தனர். அத்துணிவொடு நில்லாது நம் தலைகளும் நமக்குப் பின்னர் இந்நிலையை அடைதல் திண்ணம் என்றும் துணிந் தனர். நமக்குப் பின்னரோ? இப்போதே நாம் இறக்க நேருமோ என்றும் கவன்றனர். அக்கவலை அவ்விருவரையும் அழ வைத்தது. அவ்வைப்பே இச்செய்யுளில் அமைந்த பொருள் வைப்பாகும்.

"திங்கட் சடைக்கற்றைப் புத்தேள் திருமார்பிற்
பைங்கட் டலைகள் பலவும் நகுவ போலுமால்
பைங்கட் டலைகள் பலவும் நகுவகண்டு
அங்கட் கமலத் தயனும்மாலும் அழுவரால்."

[குறிப்பு :- திங்கள் - பிறை. சடைக்கற்றையை உடைய புத்தேள்; சிவபிரான். தலைகள் - அயன் தலை, மால்தலை. கற்பந் தொறும் உள்ளவராய் எத்தனையோ பிரமர் எத்தனையோ விட்டுணு கொள்ளப்படுதலின், தலைகள் என்று பன்மையிற் கூறினர். அயனும் மாலும் அழுகைக்குக் காரணம் அத்தலைகள் அப்பிரம விட்டுணுக்களுடைய நிலையாமையை அறிவுறுத்தி அவர் தலைக்கும் அந்நிலைவரும் என்று குறித்து நிற்பதே. புத்தேள் - தேவர். புத்தோள் - புதியவள். இவ்விரண்டற்கும் உள்ள வேறுபாடு இன்றிக் கலித்தொகைப் பதிப்பு உளது. மருதக்கலி. 17. 'புலத்தகைப் புத்தோள்' 'புலத்தகைப் புத்தவள்' என்றே இருந்தாலன்றி நச்சினர்க்கினியர் 'புதியோள்' என்று உரை எழுதார். 'புத்தேள்' என்று ஆங்குப் பாடம் இருப்பது பிழையே ஆகும். 'புத்தவளிற் புக்காள்' என்ற பாடம் இருந்த தென்று இ. வை. சு. ஐயர் தம் பதிப்பில் காட்டினர்.]

(தொடரும்)

---

இராகம்: உதயரவிச் சந்திரிகா — ஆதிதாளம்.

பல்லவி

சித்திவி நாயகா சித்தம் அருள்வாய்
சீர்கழலடி சரணம் சரணம். (சித்தி)

அநுபல்லவி

நித்தமெய்ஞ் ஞானமே யருள்வாயே இந்த
நீணிலந் தன்னில் வீணுயுழ லாமல் (சித்தி)

சரணம்

நானென தென்னு மகந்தை ஒழிய
ஞாலமீது ஆசை தானும் நீங்கிட
ஆனசொல் செய லுமொன்று பட்டிட
அன்பே சிவமென அகம் உணர்ந்திட. (சித்தி)

S. கலியாணசுந்தரம்,
ஓய்வுபெற்ற ஆபீஸ் சூப்பரின்டெண்டு
ஜில்லா போலீஸ் ஆபீஸ்
பாளையங்கோட்டை.

# முடித்தவாறும் என்றனக்கே தக்கதே

Dr. V. A. தேவசேனபதி அவர்கள் M. A. Ph. D.
University of Madras.

"முடித்தவாறும் என்றனக்கே தக்கதே முன்னடியாரைப்
பிடித்தவாறுஞ் சோராமற் சோரனேனிங் கொருத்திவாய்
துடித்தவாறுந் துகிலிறையே சோர்ந்தவாறும் முகங்குறுவேர்
பொடித்தவாறு மிவையுணர்ந்து கேடென்றனக்கே சூழ்ந்தேனே."

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தில் திருச்சதகப் பகுதியில் உள்ள இந்தப்பாட்டு அன்பர்கள் அறிந்த ஒன்ருகும். 'இவ்வாறு முடிவு செய்ததும் பொருத்தமே' என்று மாணிக்க வாசகர் ஏன் கூறுகிருர் எனின் பண்டிதமணி கதிரேசன் செட்டி யாரவர்களின் பேருரையில் பின்வரும் விளக்கம் காணப்பெறு கிறது. 'பாசப் பிணிப்புண்டு பண்டை வினைப்பயன் நுகர வேண்டியதாக இருத்தலான் முடையார் புழுக்கூடு ஆகிய இவ் வுடலைக் காத்துக்கொண்டு என்னை இங்கு இருக்கும்படி முடிவு செய்ததும் வினைஎச்சம் இன்மையால் பிறவியிற் புகுத்தாது மெய்யன்பர்களைத் தளரவிடாமல் திருவடி நீழலில் சேர்த்துக் கொண்டதும் பொருத்தம் என்ருர்'.

மேலும், 'உலகினர்க்கு அறிவுறுத்தற் பொருட்டு அடிகள் தம்மேல் ஏறிட்டுக் கூறுவாராயினர். அடிகள் திருவருட்பேற் றிற்கு ஆளான பெருமை அளவிடற்கரியது. அங்ஙனமாகவும் தம்மையும் தம் செயல்களையும் மிக இழிவாகக் கூறிய இடங்கள் பலவாகும். அப்படிக் கூறிய நிகழ்ச்சிகளுக் கெல்லாம் அடிகளை ஆளாக்கல் நம்மனேர்க்குத் தகுதியன்று. மற்றை அடியார் களும் பொதுவான மக்கள் இயல்புகளை ஒரோவிடங்களில் தம் மேல் ஏற்றிக் கூறியிருப்பதை அறிகின்ருேம்' என்றும்,

'மாயையின் படைப்பாக ஒரு பெண் அடிகள் முன்னிலை யில் காமச் செயல்களைக் காட்டி நடித்ததாகவும் கொள்ளலாம்' என்றும், "மாயை மயக்கமும் செய்யுமன்றே" என்பது சிவ ஞான சித்தியென்றும் பண்டிதமணி அவர்கள் கூறுகிருர்கள்.

திருவருள் பெற்ற அடியார்கள் தம்மையும் தம் செயல்களையும் இழிவாகக் கூறுவதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். அவற்றுள் சில வருமாறு :

1. திருவருள் பெறுவதற்குமுன் தாம் இருந்த நிலையை நினைத்து அடியார்கள் அவ்வாறு கூறுவதாக இருக்கலாம்.

2. திருவருளிலேயே நிலைத்திருக்க விரும்புவோர் அந்நிலை சிறிது குலைந்து உலகியலுக்கு இடம் தந்தாலும் மிகவருந்தி நிலைமாற்றத்திற்காகத் தம்மையே நொந்து கொள்வர்.

3. தூய்மையே உருவான இறைவன்முன் பிறஉயிர்கள் தூய்மை குறைந்தனவாகக் காணப்படுமாதலின் கடவுள் திருமுன் அடியார்கள் தம்மை இழிந்தவராகவே கருதுவர்.

4. சிறந்த உள்ளம் படைத்த சான்றோர் தாம் வாழும் சூழலில் காணப்பெறும் குறைகளைத் தம்மேல் ஏறிட்டுக் கூறுவர், பிறரைக் குறை கூறார்.

இனி, மாயையின் படைப்பாக ஒருபெண் அடிகள் முன்னிலையில் காமச் செயல்களைக் காட்டி நடித்ததாகக் கொள்வதும் ஒருவகையில் அப்பர் வாழ்க்கையில் நிகழ்ந்ததை நினைவுறுத்துவதாக உள்ளது. சேக்கிழார் கூறுவதை நினைவு கொள்ளலாம் :

“ புல்லோடுங் கல்லோடும் பொன்னோடு மணியோடுஞ்
சொல்லோடும் வேறுபாடிலா நிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் திருப்புகலூர் நாயகனுர் திருவருளால்
வில்லோடு நுதன்மடவார் விசும்பூடு வந்திழிந்தார்.

வானக மின்னுக் கொடிகள் வந்திழிந்தா லெனவந்து
தானநிறை சுருதிகளிற் றகுமலங்காரத்தன்மை
கானவமுதம் பரப்புங் கனிவாயி லொளிபரப்பப்
பான னெடுங் கண்கள் வெளிபரப்பி யிசைப்பாடுவார்.

கற்பகப் பூந்தளிரடி போங்காமரு சாரிகைசெய்ய
வுற்பலமென் முகிழ்விரல் வட்டணையோடுங் கைபெயரப்
பொற்புறுமக் கையின்வழி பொருகயற்கண் புடைபெயர
வற்புதப் பொற்கொடி நுடங்கியாடுவ போலாடினர்.

ஆடுவார் பாடுவாரலர் மாரிமேற் பொழிவார்
கூடுவார் போன்றணைவார் குழலவிழ விடைநுடங்க
வோடுவார் மாரவேளுடன் மீள்வா ரோளிபெருக
நீடுவார் துகிலசைய நிற்பாருமாயினர்.

இத்தன்மை யரம்பையர்க ளேவ்விதமுஞ் செயல்புரிய
வத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா வன்புருகு
மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தஞ்
சித்தநிலை திரியாது செய்பணியின் றலை நின்றார்.

இப்மாயப் பவத்தொடக்கா மிருவினைகடமை நோக்கி
யும்மாலிங் கென்ன குறையுடையேன் யான்றிருவாரு
ரம்மானுக் காளானே னலையேன் மினிரேன்று
பொய்ம்மாயப் பெருங்கடலு ளெனுந் திருத்தாண்டகம் புகன்றார்.

மாதரவர் மருங்கணைய வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள் செய்திடவும்
பேதமிலா வோருணர்விற் பெரியவரைப் பெயர்விக்க
யாதுமொரு செயலில்லாமை யிலிறைஞ்சி யெதிரகன்றார்.''

ஆகவே, மெய்யடியார்கள் வாழ்க்கையிலும் இத்தகைய சோதனைகள் ஏற்படுகின்றன என்பது பெறப்படும். எனினும், "மாயை மயக்க முஞ்செய்யு மன்றே" என்னும் கருத்து சித்தியாரில் தெரிவிக்கப்படும் செய்யுள் வருமாறு:

"நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகத்திற்கோர்
வித்துமாய், அசித்தா யெங்கும் வியாபியாய் விமலனுக்கோர்
சத்தியாய்ப் புவனபோகந்தநு கரணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய்மாயை மயக்கமும் செய்யுமன்றே."

இச்செய்யுள் மாயையின் சொருபங் கூறுவதெனத் தொடங்கி மேலும் அதனை விளக்கிச் செல்லும் சிவஞான சுவாமிகள், "இத்தன்மைத்தாகிய மாயை ஆணவமலம்போல மயக்கமே செய்யுமென்னுஞ் சைவருள் ஒரு சாராரை மறுத்தற் பொருட்டு மயக்கமுஞ் செய்யு மென்றுங் கூறினார்" என்று கூறுகிறார். ஆகையால் சித்தியார் கருத்து இந்த இடத்திற்குப் பொருத்தமாகத் தெரியவில்லை.

இக்காலத்து ஆராய்ச்சி முறையில் பார்க்கும்போது தல புராணங்களை வரலாற்று உண்மை கூறுவனவாகக் கொள்ள முடியாதெனினும் மஹா வித்வான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய திருப்பெருந்துறைப் புராணத்தில் திருவாதவூரர் திருவவதாரப் படலத்தில் கூறப்பெறும் நிகழ்ச்சிகளோடு 'முடித்தவாறும் என்றனக்கே தக்கதே' என்னும் செய்யுளைப் பொருத்திப்பார்ப்பது சுவைபயப்பதாக உள்ளது.

சம்புபாதாசிருதர், சிவஞானவதி என்னும் இருவர் 'பரசமயக் குறும்பொழிக்கும் ஒரு மதலை' இறைவனருளால் தமக்குப் பிறக்க வேண்டும் என்று வேண்டிக்கொண்டனர். அமரர்கள் சிவபெருமானிடம் சென்று,

" திரைக்கடல் சூழுலகமெலாஞ் சீவரப்போர்வை யரடர்ந்து
வரைக்கரும் வைதிக சைவமார்க்க மொழித்தன ரதனு
லுரைக்கருந்தீக் கருமமிலையும்பர் பசித்தனர் மெலிந்தா
ரரைக்கலை திக்காகவுளா யடியேங்கள் செய்வதெவன்."

என்று தம் குறை இரப்ப, இறைவன் சாக்கியர்வலியை வென்று களைவதாக உறுதி கூறியனுப்பினர். இந்தச் சமயத்தில் தீவிர தரசத்திநிபாதமுடைய ஆயிரங்கணநாதர், "முதுபுகழாகமத்துண்மை மொழிந்தருளவேண்டுமென" இறைவனிடம் விண்ணப்பஞ்செய்ய திருவுத்தரகோச மங்கையில் அவர்களுக்கு அருள் செய்வதாகக் கூறி இறைவன் அவர்களை அங்கே அனுப்பினர். அவர்கள் உத்தரகோசமங்கையை அடைந்து நாள்தோறும் முறைப்படி இறைவனை வணங்கி ஐந்தெழுத்தை இடைவிடாது ஓதினவர்களாயிருந்தனர். இறைவன் அவர்களன்பிற்குகந்து அவர்களுக்கு அருள் செய்வதற்காக எழுந்தருளினுர். தம் அடி பணிந்து நின்ற அவர்களை அமரச்செய்து ஆகமங்களின் உண்மையை இறைவன் விளக்கத்தொடங்கினுர். அந்தச் சமயத்தில் இந்திரன் தன் பரிவாரங்களுடன் அவ்வழி வந்தான்.

" அரம்பையுருப்பசி திலோத்தமை யாதியரமாதர்
வரம்பயிலு முழவாதி மாண்புதழீஇ யெதிர்நடிப்பப்
பரம்புபலர் வெண்கவரி யெடுத்திருபக்கமும்வீச
நிரம்புவரைமிசை மதிபோனிகழொரு வெண்குடைநிழற்ற.

.........................................................

வெளியாய நடவையிடை விளங்கவரு மிந்திரனைக்
களியாய கருத்திறெடுங் கண்டுவந் தொல்லையின்மறந்தார்
தெளியாய கணநாதரரயி ரருட்சேரரொருவர்
வளியாய வுணவுணும் பூன்மாதேவனஃதுணர்ந்து

திருவாதவூரினிடைத் தினந்தோறும் பணிவிடைசெ
யொருவாத தவமறையோருள்ளிய காரியமுடிய
வெருவாத தேரரெலாம் வேரற்றுரென்றுமுகில்
பொருவாத மேனியன் முற்புலவரெலா மகிழ்தூங்க

உண்மையுரைத்திட நாமேயுபக்கிரமஞ் செயுங்காலை
வண்மையிதுவென வேறோர்விடயத்து மனமுய்த்தாய்
தன்மையின் மற்றிதனுலித்தரணியிலோர் பிறப்புற்றே
யண்மையினச் செல்வமனுப வித்துநமை யடைகென்

என்றுசொல நடுநடுங்கி யென்செய்கே னெனக்கதறு [ருன்
நன்றுதேர்கணநாதர் முகநோக்கி நம்பெருமா
னென்றும் வெருவலைநாமே யுன்றலைமே லடிசூட்டிக்
கோன்றுமல மின்பநிலை கொளச்செய்வோ மெனப்புகன்றுன்.

விடைகொண்ட பரமனருண்மேற் கொண்டகணநாத
ருடைகொண்ட கடன்யடந்தை யுவப்பெய்தவாதவூர்
நடைகொண்ட சம்புபாதாசிருதர் நன்மனையா
லடைகொண்ட திருவயிற்றினுங் குரிக்குங் கருவானுர்."

"அரம்பை யுருப்பசி திலோத்தமையர மாதர்" புடைசூழ வரும் இந்திரனைக் "களியாய கருத்திறெடு கண்டு உவந்து" மெய்யுணர்வுபெறும் நாட்டத்தைச்சற்றே மறந்ததால் இறைவன் கணநாதரை இவ்வுலகில் பிறக்கச்செய்தார்.

"மானேர்நோக்கி மணவாளாமனனே நின்சீர் மறப்பித்திவ்
வூனேபுகளன்றனை நூக்கியுழலப் பண்ணுவித்திட்டாய்
ஆனால்அடியேன் அறியாமைஅறிந்து நீயேஅருள்செய்து
கோனேகூவிக் கொள்ளுநாள் என்றென்றுன்னைக் கூவுவதே."

என்பது போன்ற திருவாசகப் பாக்களையும் பொதுவாக மானிட உடல் தாங்கிப் பிறப்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாமெனினும் திருவுத்தரகோசமங்கைப் புராணத்தில் கூறப்பெறும் நிகழ்ச்சிகளோடு பொருத்திப்பார்த்தும் மகிழலாம்.

---

# வெண்ணிலாவும் வள்ளிநாயகியும்

திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள்,
அசிஸ்டென்ட் கமிஷனர், இந்து அறநிலைய இலாகா, சென்னை.



கடவுளரையோ அல்லது மக்களுள் சிறந்தவரையோ பிள்ளைமைப்பருவத்தில் வைத்து, குழந்தையாகப் பாவித்து, பெற்றூர் உற்றூர், பெரிதும் மகிழுமாறு, அவ்வப்போது செய்யும் செயல்களைப் பாராட்டி, படம் பிடித்துக் காட்டும்நூல் பிள்ளைத் தமிழ் ஆகும். இது பத்துப் பருவங்களையுடையது. அதிலொன்று 'அம்புலிப்பருவம்'. இது 15 மாதக்குழவியாகக் கருதிப்பாடப் படும். வானத்தில் சஞ்சரிக்கும் வெண்ணிலாவை (அம்புலி) குழந்தைக்குக் காட்டி அதனுடன் விளையாட வருமாறு, சாம, பேத, தான, தண்ட உபாயங்களைக்கூறி, சந்திரனைக் கை கொண்டழைக்கும் ஒருபகுதி. எத்தனையோ பிள்ளைத்தமிழ் நூல்கள் இருக்கின்றன. வள்ளியம்மையார் மீது, பிள்ளைத்தமிழ் பிரபந்தம் இயற்றியவர், மகான் வண்ணச்சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகள் திருவுருவாளர் எனவழங்கும் தண்டபாணி சுவாமிகள் ஒருவர்தான். முருகன் புகழ்மாலை பாடிய அருட்கவி வரிசையில் தண்டபாணி சுவாமிகளும் ஒருவர். அவ்வருளாளர்களின் வரிசையைக்கூறி, அவர்களின்தாள்களைத் தாங்கும் சென்னி அடியேனுடையவன், என்று ஒரு கவியரசு, பாடும் எழிலைப்பாருங்கள்.

"சந்தம் பதினுருயிரஞ் சொல்
சதுரனல்லேன் கீரனல்லேன்
சங்கத்தவரு ளொருவனலேன்
தண்டபாணிச் சாமியலேன்
கந்தர்கலிவெண் பாவருளுங்
கனிவாய் மகவல்லேன்போ ருர்க்
கவிஞரேரூ மார்க்கச்ச

காயன் பகழிக்கூத்தனே
சந்தமறையுந் தமிழுந்தேர்
தன்னேரில்லாக் குமரகுரு
தாசனேவல்லேனி வர்தாள்
தாங்குஞ்சென்னியடி யேற்கு
முந்தைமறைகள் மொழிகனிவாய்
முத்தந்தருக முத்தமே
முத்தர்பரவு மெட்டிக்குடி
முருகாதருக முத்தமே."

எட்டிக்குடி முருகன் பிள்ளைத்தமிழ்.

(சந்தம்........சதுரன் - அருணகிரிநாதர்; கந்தர்.......மகவு - குமர குருபரசுவாமிகள்; போரூர்........ஏறு - சிதம்பர சுவாமிகள். (திருப்போரூர் சந்நிதிமுறை பாடியவர்); மார்க்கசகாயர் - விரிஞ்சை முருகன்பிள்ளைத்தமிழ் பாடியவர்; பகழிக்கூத்தர் – திருச்செந்தூர் முருகன்பிள்ளைத்தமிழாசிரியர்; குமரகுருதாசர் – 'தகராயல இரகசியம்', 'பரிபூரணனந்தபோதம்', 'ஷண்முக கவசம்' முதலிய இயற்றிய பாம்பன் சுவாமிகள்.

திருச்செந்தூர் வள்ளிநாயகி பிள்ளைத்தமிழில், நூலாசிரியர் வள்ளியம்மையைத் தாயாகவும், கந்தனைத் தந்தையாகவும், சிவபெருமானையும், அம்பிகையையும் பாட்டன் பாட்டியாகவும் பாவித்துப் பாடியுள்ளது ஒரு தனிசிறப்பு. முருகப்பெருமானுக்கு வள்ளி இச்சாசக்தி. தெய்வயானை கிரியாசக்தி. வேல் 'ஞானசக்தி. வள்ளி கையிலுள்ளது தாமரை மலர். தெய்வயானை கையிலுள்ளது குவளைமலர். முருகன் இளஞாயிறு. சூரிய உதயத்தில் தாமரை மலரும். முருகனாகிய, உதயசூரிய, ஞானபானுவைக் கண்ட மாத்திரத்தில் வள்ளிநாயகியாகிய தாமரை மலருகிருள். வள்ளிநாயகிக்கு முருகபிரானிடம் தனிச்சிறப்பும் தனிமதிப்பு முண்டு. "நேசமுடன் போகமுறும் வள்ளிக்கு மோகமளிக்கு முகமதி"யுடையவன் முருகவேள். முருகனுடைய ஆறு முகங்களும் களங்கமில்லாத ஆறுமுழுச் சந்திரன்களை ஒக்கும் என்கிருர், ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர், தாம் அருளிய திருச்செந்தூர் புஜங்கத்தில்.

"பனியென்று முளவாயோர் பங்கம்படாமல்
பரிபூர்ணவொளியோடு பலதிக்கு நிலவை
நனிவீசுமதி முவிரண்டென்று முளவேல்
நளிர்செந்தி லோனுறு முகமொக்கு மாலோ."
(திருச்செந்தூர் புஜங்கமொழி பெயர்ப்பு: 13வது சுலோகம்)

வள்ளிநாயகியிடம் முருகபிரான் அடைந்து கிடக்கும் சரணு கதியை குமரகுருபர சுவாமிகள் "முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில்" படம் பிடித்து காட்டுவதைக் காண்க:

"கூனேறுமதி நுதற்றெய்வக் குறப்பெண்
குறிப்பறிந்த ருகணைந்துன் குற்றேவல்செய்யக் கடைக்கண்
குறையிரந்தவர் தொண்டைவாய்த் [பணிக்கெனக்
தேனூறுகிளவிக்கு வாயூறிநின்றவன்."

இவ்வளவு சிறப்புள்ள வள்ளிநாயகியம்மை, சந்திரனுக்கு ஒப்பிடப்பட்டு, குழந்தையாகிய வள்ளியுடன் விளையாட வருமாறு, வெண்ணிலாவை அழைக்கும் பலபாடல்கள், வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ் அம்புலிப் பருவத்தில் அமைந்துள்ளன. அவற்றுள் ஒரு பாடலைமட்டும் ஈண்டு ஆராய்வோம்:

சந்திரனுக்கு மான் களங்கம். அஃதே அவனது உறவு. ஆக, சந்திரன் களங்கம் அமைந்த மேனியன். வள்ளிநாயகி மான் வயிற்றில் மகளாய் வந்த உறவு கொண்டவள். இலட்சுமியாகிய மானின் உறவு கொண்டவள்.

இலட்சுமி மானும், திருமால் சிவமுனிவராயும் வந்து, ஒருவரையொருவர் கண்ணால் பார்த்து, அதனுல் உண்டான கருப்பத்தில் வள்ளி தோன்றினுள்.

திருமலைமுருகன் பிள்ளைத்தமிழ் இயற்றிய கவிராஜ பண்டாரத்தையா அவர்கள் இவ்வரலாற்றினை அடியிற்கண்ட பிள்ளைக் கவியால் விளக்குகிறுர்.

"வள்ளிமலைதனின் முதியசிவமுனிவன் முன்னரொரு
மான்வந் துலாவமானை
மாமுனிவ னயனத்தினுற் புணர்ந்திடவதன்
வயிற்றிடை கருப்பமாகித்

துள்ளியயர்வோடு வயிறீற்றுழைந்தின் றெயினர்
தொட்டகுழியிட் டகலவுந்
துங்கச்சிலேக் குறவர்மரகதச் சிலேயெனத்
தோகையைக் கண்டெடுத்து
விள்ளுமுவகைக்கடல் படிந்தவர்கள் சிற்றூரில்
விரைவினெடு கொண்டுவந்து
வீறுடன்வளர்த்துத் திணைப்புனத் தினில்வைத்த
வேட்டுவ மடந்தைகையாற்
றெள்ளுதினை மாவுக்கவா வுற்றமோகனே
சிறுபறை முழக்கியருளே
செழுமறை முழக்கமுறுதிருமலை யருட்குமர
சிறுபறை முழக்கியருளே. "

சந்திரன் உதித்தது உதயமலையில். வள்ளி தோன்றியது வள்ளி மலையில். சந்திரன் உதயகிரியில் உதித்து, விரிந்த ஆகாயத்தில் உலாவி கடலில் அஸ்தமனமாகும் சிறப்புடையவன். வள்ளி நாயகியோ, வள்ளிமலையில் தோன்றி, ஞானகாயத்தில் முருகனேடு உலாவி செந்திற்கடலருகில் தங்கும் சிறப்பையுடையவள். 'வள்ளி ஒளித்தவளநாடு' எனப்படும் வள்ளிக்குகையில் வள்ளியம்மையார், செந்திற்கடலருகில் அமர்ந்திருப்பதை நினைவுபடுத்திக் கொள்ளுக.

'நானிலம் மதிக்கும் விறல்வேள்', முருகனும், மன்மதனும் ஆவார்கள். நானிலத்தையும் அடக்கி ஆள்பவன் மன்மதன். (நானிலம்+அதிக்கும்வேள்) நானிலம் மதிக்கும் (தியானிக்கும்) வேள் முருகன். 'பாலைக்கு நிலமின்மையின் நானிலம் எனப்பட்டது.' "முந்நீர் நாவல் தழிஇய இந்நானிலம் துஞ்சும்." (திருக்கோவையார். செய். 191) மன்மதனுக்கு தென்றல் 'தேர்,' சந்திரன் குடை-வேள் மன்மதனது தலைமேல் சந்திரன் குடையாயிருத்தலால், கீழே, தன்னிழல் அவன் தலையிற்படுகிறது. வேள் முருகன், வள்ளியின் ஊடலின் போது அவள் கழலிற்சிரம்பட வணங்குவதால், அவன் சென்னியில் வள்ளி நாயகியின் 'சரண நாண்மலர்' பதிக்கப்படுகிறது. "பணியா? என, வள்ளி பதம் பணியும் தணியா, அதிமோக! தயாபரனே!" என்ற அருணகிரியார் 'அநுபூதி' வாக்கு காண்க.

சங்குகள் உலவுகிற செந்தூர் குகேசனை காதல் புரியும் தலைவியர், தலைவனைப் பிரிந்திருக்கும் காலத்தில் நிலவின், ஒளி வெதுப்புதலால் தாபத்தைத் தருகிறாயே என, சந்திரனைப் பழிக்கிறார்கள். முருகனைக் காதலித்த தலைவியர், சகக்களத்தியாக, வள்ளி வந்தாளே என வைகின்றனர். வள்ளிநாயகியைப் போல் பெருமானிடத்து உடனிருக்கப் பெறாது, வருந்துகிறார்கள். ஆண்டவன் ஒருவனே நாயகன். ஆன்மாக்களாகிய நாமெல்லாம், நாயகனை அடைய வேண்டிய கன்னிப்பெண்கள் என்கிற தத்துவம் இங்கு விளங்குகிறது. "மாது நாயகம் என வடிவுடைய சீர் வள்ளிநாயக, மண்ணில் ஈதுநாயகம் என உனையன்றி வேறு எண்ண நாயகமுண்டோ?" என்ற திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழில் வரும் பாடலை ஈண்டு உணர்ந்து அனுபவிக்க இன்பம் பெருகும். முருகனிடத்து, மோகமுற்ற நாரியர்கள் தலைவி வள்ளி நாயகியைப் போல் உடனிருக்கப் பெறாது வருந்துவதைப் போல், ஸ்ரீஆண்டாளும், திருப்பாவை 19வது ப்பாடலில் சித்தரித்துக்காண்பித்துள்ளதையும் கண்டு மகிழ்க.

"மைத்தடங் கண்ணினாய்! நீயுன்மணாளனை
எத்தனைபோதும் துயிலெழ ஒட்டாய்காண்:
எத்தனையேனும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவமன்று தகவே லோரெம்பாவாய்."

(இது கண்ணனைக் காதலித்த நாரியர்கள் நப்பின்னையை இகழ்வது.)

சந்திரன், வெண்பற்களையுடைய நாகம் (ராகு, கேது) எதிர்பட்டபோது தடுமாறி மறைவான். வள்ளி வெண்ணிறக் கொம்புடைய யானையைக் கண்டஞ்சுவாள். சந்திரன், பசுமையான குளிர்ந்த கிரணத்தன். வள்ளிநாயகி, பச்சைநிறத் திருமேனிப் பொலிவுற்றவள்.

இவ்வளவு பொருத்தங்கள் சந்திரனுக்கும், வள்ளிநாயகிக்குமிருப்பதால்தான், சந்திரனை, குழந்தையாகிய வள்ளி பழுதில்லாப் பெரும்புகழ்க் கைக்கொண்டழைக்கிறாள். தன்வண்ணம் போலவே பச்சைநிறம் கொண்டுள்ள, இருநாழிநெற் கொண்டு முப்பத்திரண்டு வகை அறங்களையும் வளர்த்த

அம்மை காமாட்சியாகிய அறம்வளர்த்த நாயகியின் மருமகளாகிய வள்ளிநாயகியுடன், அம்புலி ஆடவாவே என்கிருர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். மாமியாரும் மருமகளும், மிகவும் கைராசிக்காரர்கள்தான். இலட்சுமியின் மகளாகிய வள்ளிநாயகியின் கைராசிக்கு என்ன குறைவு? அவளை, "குணத்தில் சிறந்த மகராசி, குறத்திக்கிசைந்த மணவாளா" என்ற திருப்புகழ் அடிகளால் அருணகிரியார் விளக்குகிருர். அறம்வளர்த்த நாயகியாகிய அபிராமியம்மையை, அபிராமி அந்தாதியில்,

"ஐயன் அளந்தபடி யிருநாழி கொண்டண்ட மெல்லாம்
உய்ய அறம் செயும் உன்னை."

என்று அபிராமிபட்டர் வழுத்துகிருர்.

இப்பொழுது கவியின் எழிலைக் காண்க:

"மானின் உற(வு) என்றென்றும் அகலா வனப்புடல்
வயங்கப் பெரும் சிறப்பும்,
மலையிடை உதித்து விரிககனத்(து) உலாவிஅலை
வாரி அருகடையு மாண்பும்
நானில மதிக்குவிறல் வேள்சென்னியிற் சரண
நாண் மலர் பதிக்கும் வீறும்,
நந்துலவு செந்திற்குகேசன் மயல் கொண்டுருகும்
நாரியர்கள் ஏசும் இயல்பும்
பால்நிறத் தந்தமுறும் நாகம் எதிர் தோன்றிற்
பயந்து தடுமாறு பண்பும்
பைங்கதிர்த் தொந்தமும் உனக்குள்ள வண்ணம் இப்
பாவைக்கும் உண்டு கண்டாய்!
ஆனியில் பெரும்புகழ்க் கைக்கொண் டழைப்பதால்
அம்புலீ ஆடவாவே
அறம்வளர்த்தவள் மருமகளாய வள்ளியுடன்
அம்புலீ ஆடவாவே."

(திருச்செந்தூர் வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ்.)

"மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க! சீர் அடியாரெல்லாம்."

---

# மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

## உரைநடை



தருமபுர ஆதீன வித்துவான்
"திருவண்ணாமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
**வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

---

(மலர் 12, இதழ் 2-ன் தொடர்ச்சி)

தமரான நின்றுணைச் சேடியரி லொருசிலர்
தடக்கையி னெடுத்தா டுநின்
றரளவம் மனைபிடித் தெதிர்வீசி வீசியிட
சாரிவல சாரி திரியா
நிமிராமு னம்மனையோ ராயிர மெடுத்தெறிய
நிரைநிரைய தாய்க் ககனமேல்
நிற்கின்ற தம்மைநீ பெற்றவகி லாண்டமு
நிரைத்துவைத் ததுகடுப்ப
இமிரா வரிச்சுரும் பார்த்தெழப் பொழிலூ
டெழுந்தபைந் தாதுல கெலாம்
இருள்செயச் செய்துநின் சேனுப ராகமெனு
மேக்கமள காபுரிக்கும்
அமராவ திக்குஞ்செய் மதுராபு ரித்தலைவி
யம்மானை யாடி யருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
ணம்மானை யாடி யருளே. 77

இசைபாடும் இயல்பை உடைய வண்டுகள் சோலைகளில் ஒலித்து ஆரவாரித்து எழுதலால் பூக்களிலிருந்து எழுந்த பசிய மகரந்தங்கள் உலகம் முழுவதும் இருள் முடும்படி செய்து அளகாபுரிக்கும் அமராவதிக்கும் உனது படையெழுச்சியால் உண்டாகின்ற தூளி என்னும் ஏக்கத்தைச் செய்யும் மதுரா

புரிக்குத் தலைவியே! தமர்கள் ஆன உனது துணைத்தோழியரில் ஒருசிலர் பெரிய உனது திருக்கரத்தால் எடுத்து ஆடுகின்ற உனது நித்தில அம்மனையைப் பற்றி உனக்கு எதிரில் வீசிவீசி இடசாரி வலசாரியாகத் திரிந்து நிமிர்வதற்கு முன்பு, ஓராயிரம் அம்மனையை நீ எடுத்து எறிய அவை வரிசை வரிசையாய் வான வெளியில் நிற்பது, உலகன்னையாகிய நீ பெற்ற எல்லா அண்டங்களும் நிரைத்து வைக்கப்பட்டதை நிகர்க்க அம்மானை ஆடி அருளுவாயாக. திருமேனியில் கூடி இறைவரது ஒரு பாகத்தைப் பகிர்ந்து கொண்ட பெண்ணரசியே! அம்மானை ஆடி அருளுவாயாக.

உயிராயிருக்கின்ற சேடியரின் மலர்மீ
துதித்தவ ளெதிர்த்து நின்றே
டொட்டியெட் டிப்பிடித் திட்டவம் மனைதேடி
ஓடியா டித்திரியநீ
பெயரா திருந்துவினை யாடுவது கண்டெந்தை
பிறைமுடி துளக்கமுடிமேற்
பெருகுசுர கங்கைநுரை பொங்கலம் மானையப்
பெண்கொடியு மாடன்மான
வெயரா மனம்புழுங் கிடுமமரர் தச்சனும்
வியப்பச் செயுந்தவளமா
மேடையுந் தண்டரள மாடமுந் தெண்ணிலா
வீசத் திசைக்களிறெலாம்
அயிரா பதத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
அம்மானை யாடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
அம்மானை யாடியருளே. 78

உயிர்த் தோழியரில் ஒருத்தியாகிய செங்கமலத் திரு மடந்தை உன்னோடு எதிர்த்துச் சூள் செய்து எட்டிப் பிடித்த அம்மனை கை நழுவி விழுதலால் அதைத் தேடி ஓடியும் ஆடியும் திரிய நீ இடம் பெயராமல் இருந்து கொண்டே விளையாடுவதை எமது தந்தையாகிய சொக்கநாதப் பெருமான் பார்த்துத் தமது பிறைத்திங்கள் சூடிய முடியை அசைக்க அம்முடியின் மீது பெருகியுள்ள தேவ கங்கையில் நுரை பொங்குதல் அக்கங்கை

யாகிய மங்கையும் அம்மனை ஆடுதலை நிகர்க்க உடல் வியர்த்து மனம் புழுங்கும் தேவதச்சனும் வியக்கும்படி செய்யப்பட்ட பெரிய வெள்ளிய மேடைகளும் குளிர்ந்த முத்துகளாற் செய்யப் பட்ட மாடங்களும் தெளிந்த நிலவை வீசுதலால் திசையானைகள் அனைத்தும் அயிராவதம் என்னும் வெள்ளை யானையை ஒத்திருக் கின்ற மதுரைத் தலைவியே! அம்மானை ஆடி அருளுவாயாக திருமேனியில் கூடி இறைவரது ஒருபாகத்தைப் பகிர்ந்து கொண்ட பெண்ணரசியே! அம்மானை ஆடி அருளுவாயாக.

"முத்தம முத்திய வம்மனை கைம்மலர்
முளரிம ணங்கமிழ
மொய்குழல் வண்டுநின் மைவிழி வண்டின்
முயங்கி மயங்கியிடக்
கொத்து மணித்திர ளிற்செயு மம்மனை
குயிலின்மி ழற்றியநின்
குழலினி சைக்குரு கிப்பனி தூங்கு
குறுந்துளி சிந்தியிட
வித்துரு மத்திலி ழைத்தவு நின்கை
விரற்பவ ளத்தளிரின்
விளைதரு மொள்ளொளி திருடப் போவது
மீள்வது மாய்த்திரிய
அத்தன் மனத்தெழு தியவுயி ரோவியம்
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே." 79

முத்துக்கள் பொதிந்த அம்மனைக் காய்கள் உனது கைக் கமல மணத்தை வீச நெருங்கிய கூந்தலில் மொய்த்த வண்டுகள் மைதீட்டிய கண் வண்டுகளோடு கூடி மயங்கி நிற்கக் கொத் தாகிய மணித்தொகுதியால் செய்யப்பட்ட அம்மனைக் காய்கள் குயில் போலக் கொஞ்சிப்பேசுகின்ற உனது குழலிசைக்கு உருகிக் குளிர்ச்சி பொருந்திய சிறுதுளிகளைச் சிந்தப் பவளத் தாற் செய்யப்பட்ட அம்மனைக் காய்கள் உனது கைவிரல்களாகிய பவளத் தளிரில் உண்டாகின்ற பேரொளியைத் திருடும் பொருட்டுப் போவதும் மீள்வதுமாகித் திரிய இறைவரது மன

மாகிய படத்தில் எழுதப்பட்ட உயிரோவியமே! அம்மனை ஆடி அருள்வாயாக. அழகு மிகுந்த கல்யாண சவுந்தரியே! அம்மானை ஆடி அருள்வாயாக.

"விளரிமி ழற்றளி குமுறுகு ழற்கொடி
விசிய வம்மனைபோய்
விண்ணி னிரைத்தெழு வதுகக னந்திரு
மேனிய தானவருக்
கிளநில வுமிழ்பரு முத்தின் கோவை
யெடுத்தவர் திருமார்புக்
கிடுவ கடுப்பவு மப்பரி சேபல
மணியி னியற்றியிடும்
வளரொளி விம்மிய வம்மனை செல்வது
வானவி லொத்திடவும்
மனனெக் குருகப் பரமா னந்த
மடுத்த திருத்தொண்டர்க்
களிகனி யத்திரு வருள்கனி யுங்கனி
ஆடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக வம்மனையே." 80

யாழைப் போல மிழற்றுகின்ற வண்டுகள் முழங்கும் கூந்தலை உடைய பூங்கொடியை ஒத்தவளே! நீ எடுத்து விசிய அம்மனைக் காய்கள் வானத்திற் சென்று வரிசையாய் எழுந்து காணப் பெறுவது வானமே திருமேனியாக உடைய சிவபெருமானுக்கு என்றே இளநிலவை வீசுகின்ற பெரிய முத்துமாலையை எடுத்து அவரது திருமார்பிலே அணிவதை ஒத்திருக்கவும் அத்தன்மையாகவே பல மணிகளால் செய்யப்பெற்ற பேரொளி தழைத்த அம்மனைக் காய்களின் வரிசை மேலே செல்வது வான வில்லை ஒத்துத் தோன்றவும் மனம் நெக்குருக மேலான இன்ப வெள்ளத்தில் மூழ்கிய மெய்யடியார்க்கு அருள் கனியும்படி திருவருள் பழுத்தற்கு இடமாகிய அரச குமாரியே! அம்மானை ஆடி அருள்வாயாக. அழகு மிகுந்த கல்யாண சவுந்தரியே! அம்மானை ஆடி அருள்வாயாக.

(தொடரும்)

---

# தேவர் கண்ட திருநாடு

திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள் எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
சரபோசி மன்னர் கல்லூரி, தஞ்சாவூர்.

[முன் மலர் - 12, இதழ் 2-ன் தொடர்ச்சி]



தேவர் கண்ட திருநாட்டையும் நகரையும் கண்டோம்; இனி அந்நாட்டு மன்னன் மாளிகையின் மாண்பையும் காண்பாம். மன்னன் மாளிகையைக் 'கோயில்' என அழைத்து 'கோயிற் சிறப்பு' கூறவருகிருர் தேவர்.

நாடு, நகர் கூறிவரும் போது தேவர் கண்ட திருநாடு இன்ப நாடாகவே இலங்கியதைக் கண்டோம்; கோயிற் சிறப்பு கூறிவரும் போதும் எங்கும் காமம் கனிந்த போகக் காட்சிகளே காண்கிறோம். போகத்தால் தேவருலகை ஒத்திருக்கிறது அரண்மனை. இதனை ஆசிரியரே 'நாகநீர் நன்னகர்' (நாகம் - தேவருலகம்) என்கிருர். இங்ஙனம் தேவர் படைக்கும் திருநாட்டில் எங்கெங்கு காணினும் அங்கெலாம் காமத்தை விளைக்கும் - பெருக்கும் சூழ்நிலைகளையே காண்கிறோம். காவியத்தில் புகும்போது ஏமாங்கத நாட்டு மன்னர் மன்னன் சச்சந்தன் கடமையை மறக்குமளவிற்குக் காம வயத்தனுய் காட்டப் பெறுகிருன். அம்மயக்கத்தின் காரணமாகவே அழிந்தொழிகிருன். இதற்கெல்லாம் காரணம் - மன்னன் அல்லன்; சூழ்நிலையே காரணம். (சூழ்நிலையால் உருவாக்கப்படுவனன்றே மனிதன்!) என உணர்த்து மாற்ருன் நாடு, நகர், கோயிற் சிறப்பு அனைத்தும் கூறிவருங்கால் காமச் சூழ்நிலையேக் காட்டுகின்ருர். காட்டுவதன்மூலம் மன்னன் அழிவிற்கு இக்காமச்

சூழ்நிலையே காரணம் என்பதையும், இவ்விதச் சூழ்நிலை இருத்தல் கூடாது என்பதையும் பயில்வோர் எல்லோரும் உணர்ந்து திருந்துமாறும் செய்கிருர் தேவர். இது கவிமரபு. இனி கோயிற் சிறப்பு கூறுவாம் :

நகரைச் சுற்றி அகழிகள் இருத்தல் போன்றே, மன்னன் கோயிலைச் சுற்றி 'அகழி' உள்ளது. இந்த அகழியில் நீர் என்றும் நிறைந்து வழிந்த வண்ணம் இருக்கும். நகரின் புறத்தே பேரகழி ஒன்று உண்டெனக் கூறினேமன்ருே? அந்த அகழியினின்றும் இந்தக் கிடங்கிற்குக் கால்வாய் வழியாக நீர் வந்து சேருகிறதாம். பெருந் தெருக்களின் வழியாகச் செல்லும் யானை முதலியன இக்கால்வாய்க்குள் வீழ்ந்து படாமல் கால் வாயின் மேற்புறம் முடப்பட்டுள்ளதாம், இதனைச் சுருங்கை எனவும் மொழிவர். இச்சுருங்கை செம்மையாக வெட்டப்பட்டு, சீர்மையுடன் விளங்குவதால் இதனைச் 'சித்திரச் சுருங்கை' என்கிருர் தேவர். இச்சித்திரச் சுருங்கை மண்மகளுக்கு ஓர் அணிகலன் போன்று பொற்பினிற் பொலிந்தது எனவும் குறிக் கிருர். அங்ஙனமாயின் அக்கரந்துபடையின் அமைப்பழகு எத்தன்மைத்தாய் இருந்திருக்க வேண்டும்?

இனி, அகழியை அடுத்து அரண்மனைக்கு அரணுக அமையும் 'மதில்' மாண்பினைக் காண்பாம். விண்ணை இடிக்கும் வண்ணம் ஓங்கி உயர்ந்துளதாம் மதில். இவ்வுயர்ச்சியை நகையும் சுவையும் தோன்ற - கற்பனைநயம் அமையத் தீட்டு கின்ருர் தேவர். தேவருலகின் எல்லையைக் காணும் பொருட்டு வானவெளியின் நடுமையத்தைப் பிளந்து மேற்செல்லுகிறது மதில்; ஆனுல் மேகமோ மேற்செல்ல வெட்டாது மதிலின் காலைக் கட்டிப் பிடித்துக் கொண்டு 'விண்ணுலகு செல்வை யாயின், விண்ணக மாந்தரனைவரும் நின்னைக் கண்டு அஞ்சுவர்; ஆகலின் நீ ஆண்டு செல்லல் வேண்டா' எனக் கெஞ்சுகிற தாம். மேகத்தின் கொஞ்சுமொழி கேட்டு நெஞ்சம் நெகிழ்ந்த மதில், அவ்வளவோடு நின்று 'எம்மை ஈண்டு வந்து காண்க' எனத் தன் கொடியாம் கைகளாலே விண்ணுலகை அழைக்கிற தாம். எப்படி கற்பனை, இதோ கவிதை:

“ இஞ்சி மாக நெஞ்சுபோழ்ந் தெல்லே காண ஏகலின்
மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து மாக நீண்ட நாகமும்
அஞ்சும் நின்னே என்றலின், ஆண்டு நின்று நீண்டதன்
குஞ்சி மாண்கொ டிக்கையாற் கூவி விட்ட தொத்ததே.”
(கோயிற்சிறப்பு - 3)

வானளாவ வளர்ந்திருந்தது மதில், மதிலேச் சுற்றி மேகக் கூட்டம்; மதில் மேலுள்ள கொடி அசைந்தது. இம்மதிலுயர்வையும் கொடி அசைவையும் கொண்டு அழகிய கற்பனே அமைத்துள்ளார். மதில் இயல்பாகவே ஓங்கி உயர்ந்திருந்தது வானத்தைப் பிளந்து செல்வதாகவும், மதிலேச் சுற்றி மேகம் நிறைந்திருந்தது மதிலேத் தடுத்து மேற்செல்ல வேண்டாம் என மேகம் தடுப்பதாகவும், மதிலின் உச்சிமீது கொடி அசைந்தமை தன்னே வந்து காணுமாறு விண்ணவர்களே மதில் அழைப்பதாகவும் கற்பனே செய்கிருர் தேவர். இக்கற்பனேயின் மூலம் மன்னன் கோயிலேச் சுற்றியுள்ள மதில் மிக உயர்ந்த மதில் என்ற எண்ணத்தையும், அம்மதிலே நேரிற்காண்பது போன்ற உணர்வையும் உண்டாக்கி விடுகிருர். இல்லேயா?

இத்தகைய அகழியையும் மதிலேயும் அடுத்து உட்புறம் அமைந்திருந்தது மன்னவன் கோயில். மன்னன் கோயிலே அடுத்து பூம்பொழில், பந்தாடுமிடம், இறைவன் திருக்கோவில், நாடக அரங்கம் போன்றன உள்ளன. அவற்றை ஒவ்வொன்ருகக் கண்டு வருவோம் வாருங்கள்:

எழில் மிக்க இளமாதர் பலர் காமக் குறிப்புடனே கூடிய களிப்பால் அரண்மனேயை ஒட்டிய பொழிலில் சென்று ஆடுவர். இதனுல் அவ் ஆடும்பொழில் இந்திர நகரின் கற்பகச் சோலேயெனச் சிறப்பு பெற்றதாம். அப்பொழிலின் நடுவே அழகிய மண்டபம் ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது. அதன் கண் அரசர் உறைவதற்கேற்ற பள்ளி மாடம் ஒன்று உண்டு. பள்ளியறையன்ருே? அதனுல் காவலனுக்குக் காமவேட்கை மிகுவிக்குமாற்ருன் அப்பள்ளி மாடத்தில் வெள்ளியாற் செய்த களிறும், பைம் பொன்னுற் சமைத்த பிடியும்; செம்பொன்னுற் செய்யப்பட்ட மானும், அம்பொன்னுற் செய்த பிணேயும் ஒன்றையொன்று காமத்தால் உள்ளுமாறு அமைக்கப்பட்டிருந்தன. நாகருலகை

யொக்கும் இப்பள்ளி மாடத்தில் பார்வேந்தன் நுழைந்து பார்வை யிடுங்கால் காமக் களிமிகு காட்சிகள் அவனுக்குக் காம உணர்வை மிகுவிப்பனவாம். இதனுல் அப்பொழிலைப் பூம்பொழில் என்பதைவிட போகப் பொழில் எனக் கூறுவதே ஏற்புடைத்தாம்.

"வெள்ளி யானை மென்பிடி மின்னி லங்கு பைம்பொனுற்
துன்ரு மானெ ருத்தலுஞ், செம்பொன் அம்பொன் மான்பிணை
உள்ளு காம முள்சுட வேந்தன் ஆங்கு உறைவதோர்
பள்ளி மாட மண்டபம் பசுங்க திர்ப்ப வண்ணமே!"
(கோயிற் - 6)

அச் சோலையின் மற்ருெருபுறம் கமுக மரம் கவினுர் காட்சி தந்து நின்றது. அம்மரம் பொன்னுற் செய்த பழத்தினையும், மரகத மணியாற் செய்த குலையினையும், வெள்ளியாற் செய்த பாளையினையும், நீலமணியாற் செய்த மடலினையும் ஏந்தி நிற்கிறதாம். அம்மரத்தின் நெற்றியினின்று தொங்கும் முத்து வடம் ஊசலாடவிட்ட கயிறு போன்று காட்சி தருகிறதாம்.

"கோழ ரைம ணிம்மடற் கூந்தல் நெற்றி யேந்திய
மாழை யந்தி ரள்கனி மாம ணிம ரகதஞ்
சூழ்கு லைப்ப சுங்கமுகு சூலு பாளை வெண்பொனுல்
ஊழ் திரண்ம ணிக்கயி றூச லாட விட்டதே!"
(கோயிற் - 7)

கமுகம் பழங்கள் மஞ்சள் நிறத்தனவன்ருே! எனவே அவை பொன்னுல் செய்யப்பட்டவை போன்றுள என்ருர்; குலை பசுமை நிறமுடையதாதல் பற்றி மரகத மணியாற் செய்யப்பட்டதோ என வியக்கிருர்; பாளை வெண்மை நிறத்தது ஆயினமையின் வெள்ளியாற் செய்யப்பட்டது என்றும், மடல் நீல நிறத்ததாய் இருத்தல் பற்றி அது நீலமணியால் அமைக்கப்பட்டதோ எனவும் ஐயுறுகிருர். இங்ஙனம் இயற்கையை வியக்குமாற்ருன் - கமுகின் பூத்துக் குலுங்கி பொற்கனிகள் மல்கிய காட்சி கண்டு மாட்சிமை தோன்ற மொழிந்ததாகவும் கொள்ளலாம்; இன்றேல் பொன்னும் மணியும் கொண்டு புனையப்பட்ட செயற்கைப் பாக்கு மரம் அப் பொழிலில் வைக்கப்பட்டிருந்த தென்ருே கொள்ளலாம். எவ்வாற் ருனும் இக்காட்சி களிப்பினை யூட்டுவதாகவே உள்ளது.

பொழிலின் இன்னொருபால் செற்கையாகவே சமைக்கப் பட்ட குன்று ஒன்று உளது. செயற்கையில் செய்யப்பட்டதே யாயினும், இயற்கைக் குன்றெனவே வளம் கெழுமியதாய்த் திகழ்கிறதாம் அச் 'செய்குன்று.' இதன்கண் தினைப்பயிர்கள் அடர்ந்து வளர்ந்துள்ளன. அதனூடே செல்லென ஒலித்து மெல் லென அருவி பாய்ந்து வருகிறது. அதனருகில் சுனைக் குவளை மலர்கள் மலர்ந்து அழகொளி வீசின. தினைப்பயிரையும் அருவி யையும் காத்து நிற்போர்தம் கண்கள் போல இக்குவளை மலர்கள் விரிந்து மலர்ந்திருந்தனவாம். அவற்றை மானும் பிணையும் ஒன்றி நின்று நோக்கின. குன்றைச் சுற்றிலும் சந்தனம், அசோகம், சுரபுன்னை போன்று மலர்ந்து மணம் வீசா நின்றன. இவையன்றி இச் செய்குன்றில் ஒருபால் குயில் கூவும், இன் னொருபால் தேன் ஒழுகும்; பிறிதொரு பால் வண்டு ரீங்காரம் செய்யும், மற்றொருபால் வேங்கை மரம் மலர்களைச் சொரிய நிற்கும். இக் கவினுர் காட்சி எப்படி இருந்ததென்றால் தெளி விக்க தேவரே வந்து விடுகிறார்:

"தீங்கு யின்ம ணந்துதேன் றுஞ்ச, விண்டு பாண்செய,
வேங்கை நின்று பொன்னுகுக்கும் வெற்பு டுத்த சந்தனம்
ஓங்கு பிண்டி சண்பக முழி நாறு நாகமும்
நீங்க நீங்கு மின்னுயிர் நினைப்பி னின்றி ளஃகுமே!"

(கோயிற் - 9)

செய்குன்றையும், அஃதமையும் சோலையையும் நீங்கின் உயிர் நீங்கும் என்றும், நினைத்தாலோ உயிர் தளிர்க்கும் என்றும் கூறுகிறார் தேவர்! அப்படியாயின் அச் செய்குன்றின் சிறப்பை யும் அப்பொழிலின் எழிலையும் என்னென்பது?

பொழிலை அடுத்து ஆடிடம் ஒன்று அமைந்துளது. இஃது இளையர் (மகளிர்) பந்தாடுமிடம். இவ் ஆடிடத்தின் எல்லையிலே வரிசையாக முத்துக்கள் அழுத்தப்பட்டுள்ளன. அவ்விடங்கள் அனைத்தும் பொன்னால் இயற்றப்பட்டனவாம். இச்சித்திர வேலைப்பாடுகட்கு இடையே மணிகள் பல பதிக்கப்பெற்றுள்ளன. இத்தகைய விளிம்பு வேலைப்பாடும் பிறவும், விண்ணுலகை இம் மண்ணுலகிலே கொணர்ந்து இருத்தினாற் போன்ற இனிய காட்சியை நல்குகின்றனவாம்!

மகளிர் பந்தாடுமிடம் கண்டோம்; இனிப் பந்தாடிய முறையினைக் காணவேண்டாவா? மகளிர் பந்தைக் கையால் தொடாது கால்கொண்டே தட்டி எடுப்பர்; தங்களுடைய மாலைகளுக்குள் பந்தை மறைத்துக் கொள்வர்; பின்கையிலே கொண்டு செல்லவோட்டுவர்; மாலை சூட்டிய தங்கள் நெற்றிகளில் தீட்டுவர்; ஒருகாலுக்கு ஒருகால் உயரும் வண்ணம் பத்தியாகப் புடைப்பர்; தங்கள் நிலையில் நின்றவாறே பாம்பு போலப் பரந்து உலாவுமாறு பந்தை அடித்தலும் செய்வர். இன்னணம் முற்ற விளையாடி முடிவிலா இன்பம் எய்துவர் ஏமாங்கத நாட்டு இளமகளிர். பந்தாடும் பாங்கினைப் பாடல் கொண்டு தெளிக:

“வைத்த பந்தெடுத்தலும், மாலை யுட்க ரத்தலும்,
கைத்த லத்தின் ஒட்டங் கண்ணி நெற்றி தீட்டலும்,
பத்தி யிற்பு டைத்தலும், பைய ரவ்வி ளுடலும்,
இத்தி றத்த பந்திறு டின்ப மெல்லை யில்லையே!”

(கோயிற்-11)

மகளிர்தாம் பந்தடிக்கின்றன ரென்றால், மதயானைகள்கூட பந்தடிக்கின்றனவாம்! மன்னர்களின் தலைகளே பந்துகளாம்! மருப்புக்களுக்கிடையே அவைகளை வைத்துப் பந்தடிக்கின்றனவாம். அத்தகைய யானைகளும் அவ்விடத்தே உள்ளன; இத்தகைய யானை, புரவி, தேர் போன்றனவற்றின் ஒலிகள் மிக்கிருக்குமாம் அவ்விடத்தில்!

இத்தகைய சூழலின் நடுவே மன்னவன் கோயில் மாண்புற்று விளங்குகின்றது. இவண் பல மாடங்கள் உள்ளன. பகையரசர்களை மனத்தான் நோக்கி யாமந்தோறும் காவல் புரியும் மள்ளர்கள், காவல் முடிந்தபின் துயில் கொள்வதற்கென துயில் கொள் மாடமும், பகைவரிடம் பெற்று வந்த திறை பல நிறைந்து விளங்கு நிதி மாடங்களும், மகளிர்தம் அணிகலன்களை இட்டு வைக்கும் மாடமும், போர்க் கருவிகளை வைத்திருக்கும் பாசறைகளும் இன்னபிற எண்ணற்ற இடங்களும் அரண் மனையின்கண் உள்ளன.

ஒருபால் ஸ்ரீகோயில் உள்ளது. இங்கே காவன் மகளிர் (சிறைப் பிடிக்கப்பட்ட பகைவர்தம் மனைவியர்) அரசர்க்கு

வெற்றி நிலைபெறுமாற்றான் இறைவனை ஏத்துவர். அதனை யொட்டி மாதரார் கூத்து நிகழ்த்துமிடங்கள் பலவுள. இவண் இடையறாது கூத்து நிகழும். கூத்து நிகழ்த்தும் நங்கையரோ கட்டழகு வாய்ந்தவர்கள்; காளையரை ஈடுபாடு கொள்ளச் செய்யும் எடுப்பான இனிய தோற்றத்தினர். அவர்கள் தங்கள் வேல் விழிகளைச் செலுத்தி வீரர்கள் உடலையும் வெப்பமுறச் செய்வர்; நெஞ்சில் நிறைந்து அவர்கள் இதயத்தை நினைவுத் தீயால் சுட்டெறிப்பர். இத்தகையது நீடுதோன்றினிய நங்கையர் நடமாடும் பள்ளிகள் என்பதை,

"காய்த்து நின்று கண்டெறுங்
காமர் வல்லி மாதரார்
கூத்த ருத பள்ளி." (*கோயிற் – 14*)

எனச் சுட்டினார் தேவர். இத்தகைய நடன அரங்கிற்கும், இறைவன் திருக்கோயிலுக்கும் இடையே, 'பூத்த கோங்கும் வேங்கையும் பொன்னிணர் செய்கொன்றையும் காய்த்து நின்று' கவினுறச் செய்கின்றன.

இனி, அரசர் உறையும் அரண்மனை அமைப்பு கூறுவோம். மாமணிகளால் கடைந்து எடுக்கப்பட்ட தூண்களே அரண்மனைத் தூண்கள்; சுவர்களோ பொன்னால் இயற்றப்பட்டன; இச்சுவர்களிலே கைம்மரங்கள் பலவுள-அவை சந்தன மரத்தாற் செய்யப்பட்டு, வெள்ளியால் வேயப்பட்டனவாகும். இன்னணம் பொன்னும் மணியும் கொண்டு புனையப் பெற்ற மன்னன் மனைச் சிறப்பு நோக்கும்போது, இந்திரன் திருநகர்தான் விண்ணை விடுத்து மண்ணை நண்ணி நின்றதோ என நினைக்கத் தோன்றுகிறது என்கிறார் தேவர் :

"கந்து மாம ணித்திரள் கடைந்து செம்பொன் நீள்சுவர்ச்
சந்து போழ்ந்து இயற்றிய தட்டு வேய்ந்து வெண்பொனால்
இந்தி ரந்தி ருநகர் உரிமை யோடும் இவ்வழி
வந்து இருந்த வண்ணமே அண்ணல் கோயில் வண்ணமே!"
(*கோயிற் – 15*)

அவ்வளவு சிறப்பினதாம் அரண்மனை! தேவர் கண்ட திருநாட்டு (நகர்) மன்னன் மாளிகை இந்திரன் திருநகரோ என வியக்கும்

வண்ணம் இருக்கிறதாம்! எப்படி காட்சி! அப்படியென்றால் அரண்மனைச் சிறப்பை இனி இப்படியென இயம்பவும் வேண்டுங் கொல்?

ஆடலோசையும், பாடலிசையும், முழவொலியும், ஏழிசை வல்ல யாழிசையும் எங்கும் நிறைந்து அறிவுக்கும் உணர்வுக்கும் அரிய விருந்தாய் அமைந்தன. இசையின்ப நாதத்தில் பொழுது கழிவதுகூடத் தெரியாது நாட்களும் கழியா நின்றனவாம் மன்னனுக்கு!

இத்தகைய நாட்டிற்கு எத்தகைய மன்னன் அரசனாய் இருந்தான் எனக் காணவேண்டுவது இன்றியமையாததன்றோ? அன்றியும் கனவு கண்டு கற்பனை நாடு படைக்கும் கவிஞர்கள் அந்நாட்டின் உயிரெனத் தகும் மன்னர்களையும் ஒப்பற்றவர்களாகவே படைக்கக் காண்கிறோம். அம்முறையில்தான் தேவரும் தாம் படைத்த திருநாட்டு மன்னனின் தேற்றமும் தெளிவும் கூறுகிறார்.

ஏமாங்கத நாட்டு மன்னவன், அஞ்சி அடைந்தார்க்கு அமிழ்தம் அன்னவன்; அடையாதார்க்கு நஞ்சினும் கொடிய சிற்றத்தினன்; கடிமார்பன்; தன்னுடைய வண்கையால் கலி (வறுமை) மாற்றினன்; கலைக்கு இடனாகி நின்றான்; வெண் கொற்றக் குடை கொண்டு ஒப்ப நிழற்றலால் இவ்வுலகிற்குத் தாதையாக விளங்கினான். ஆகலின் அவன் தாள் நிழல் தங்க வேண்டி இவ்வுலகம் அவன் மேல் வைத்த காதலாலே களிப் படைகிறதாம்.

சிற்றத்தினன் என்பதால் திறலும், அமிழ்தம் அன்னவன் என்றதால் அளியும், கடிமார்பன் என்பதால் அழகும், கலி மாற்றினன் என்றதால் கொடையும், தேர்த்தொகை மாற்றினன் என்பதால் வீரமும், கலைக்கிடனாய் என்றதால் கல்வியும், ஒப்ப நிழற்றும் உயர்குணத்தான் என்பதால் முறை செய்யும் நிறையும் உடைய இன்குணத்தன் ஏமாங்கத நாட்டு மன்னவன்.

வாழையடி வாழையென வளர்மார் மரபில் வந்தமையால் பீடுமிகு ஏறும் இன்சொல்லால்-இளகிய நெஞ்சால் தேன் மாரியும் போன்றவன் தேவர் படைத்த மன்னன். இன்னும் அவனை,

"தருமன் தண்ணளியால், தனது ஈகையால்
வருணன், கூற்றுஉயிர் மாற்றலின், வாமனே
அருமையால் அழகிற்கு ஐந்துடைத்
திரும கன்,திரு மாநில மன்னனே!"

(நாமகள் இலம்பகம் - 131)

தேவர் தாம் கண்ட திருநாட்டு மன்னவன் கருணைமறவன் எனக் காட்டுகின்றார்; காட்டுகின்ற நயம் உணரற்பாற்று. விருப்பு வெறுப்பு போன்ற உணர்ச்சி எல்லோருக்குமே இருக்குமன்றோ? அரசனாயினும் அவனும் மனிதன்தானே! வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாடு பாராட்டக் கூடுமன்றோ? எனவேதான் தேவர், கருணையின் நிலையமாய அரசனைத் தருமன் என்கிறார். சுருங்கக் கூறி விளங்க வைக்குமாற்றான் 'தருமன் தண்ணளியால்' என்றார்.

அஃதே போன்று அரசனாக அமைபவன்மாட்டு அரசன் என்ற கடமையுணர்வும், மனிதன் என்ற அன்புணர்வும் அமையுமாற்றான் - அரசன், மனிதன் (As a King and as a Man) என்ற இருவேறு நிலைகள் இருக்கத்தான் செய்கின்றன. இருவேறு உணர்வுகளுக் கிடையே செயலாற்றும்போது செம்மையுடன் விளங்க, சீர்மையுடன் துலங்க இயலுமா என்பது ஐயமே! தம் நாட்டு மன்னன், நெடுநுகத்துப் பகல் போன்ற நடுவு நிலையன் என்பதை 'ஈகையில் வருணன்' என்பதாற் தெளிவு படுத்துகிறார் தேவர். மாரி வேற்றுமை பாராது எங்கும் எப்பொழுதும் பொழிகின்றதன்றோ? அத்தகையோன் தேவர் கண்ட திருநாட்டுப் பெருமன்னன். இப்பொழுது பாடலை மீண்டும் பாருங்கள்.

அமிழ்தத்தை ஒத்தலும் உலகை நிழற்றலுமாகிய தண்ணளியால் தருமன்; கலிமாற்றின ஈகையால் வருணன்; தேர்த்தொகை மாற்றுமிடத்தால் அழற்சிற்றத்தனைய் உயிரை மாற்றுதலிற் கூற்றம்; கலைக்கிடனும் அருமையால் வாமன்; மகளிர்க்கு அணங்காகிய அழகாற் காமன் என விளங்கியவன் தேவர் படைத்த தலைமன்னன். இத்தகைய அரசனுக்கு எத்தகைய சிறப்பு இருக்கும் என்று சொல்லவா வேண்டும்; நல்லரசனை நானிலம்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# திருப்பெருந்துறை ஆளுடைய நாயகர் திருக்கோயில் கனகசபை மண்டபத்தில் பொறிக்கப்பெற்றுள்ள

# கல்வெட்டுப் பாடல்கள்.

கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர். சைவசித்தாந்த வித்தகர்,
வித்துவான். வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்

முன்னுரை :

திருப்பெருந்துறை என்பது மாணிக்கவாசகப் பெருந்தகையார்க்குச் சிவபெருமான் குருந்த மரநிழலில் ஞானாசிரியராக எழுந்தருளியிருந்து உபதேசித்த பழஞ் சிறப்புடைய திருவாசகம் பெற்ற பதியாகும். இங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் திருப்பெயர் ஆளுடைய நாயகர் என்பதாகும். இப்பெயர் ஆவுடையார் எனச் சிதைந்து கோயில் என்னும் பெயரோடு சேர்ந்து ஆவுடையார் கோயில் என்று வழங்கப்பெறுகின்றது. இப்பெயர் இக்கோயிலிலுள்ள பச்சையப்ப முதலியார் கல்வெட்டில்தான் முதல் முதல் காணப்படுகிறது. ஏனைய கல்வெட்டுக்களில் ஆளுடைய நாயகர் கோயில் எனக் குறிக்கப் பெற்றுள்ளது. இக்கோயில், பழமையும் பெருமையும் வாய்ந்த திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. இவ்வாதீனத்தில் இப்பொழுது இருபத்தொன்றும் பட்டத்தில் வீற்றிருந்து அருட்செங்கோல் நடத்தியருளும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இக்கோயில் கல்வெட்டுக்களைப் படித்துப் பொருட் சுருக்கம் எழுதுமாறு அடியேனைப் பணித்தருளினார்கள். அடியேனும் அவ்விதமே செய்துள்ளேன். கீழே குறிக்கப்பெற்ற கல்வெட்டுப் பாடல்கள் இதுகாறும் தென்

---

(முன் பக்கத் தொடர்ச்சி).

போற்றத்தானே செய்யும்! இதனை ஆசிரியரே அவர் படைத்த மன்னன் வானந்தோய் புகழினன் என்கிறார்.

இதுகாறும் தேவர் கண்ட திருநாட்டு, நகர, அரசு நெறிகளையும் நீர்மைகளையும் கண்டோம்; திருநாடு காணுமாற்றான் நல்லரசன் நலமிழப்பதற்குச் சூழ்நிலைகளே காரணம் என-ஆக்கம் தரும். அழிவேயென அறிந்தோம்.

இந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் வெளி வராதவைகள். ஆண்டு அறிக்கையிலும் (Annual report on South Indian Epigraphy for the year 1925) இவைகளைப் பற்றிக் குறிப் பிடவில்லை. எனவே இப்பாடல்கள் ஆராய்ச்சியாளர்க்குப் பயன் படுமென்று சிறு குறிப்புக்களுடன் குமரகுருபரனில் வெளி யிடலானேன்.

**கட்டளைக் கலித்துறை :**

"இதம்வெகு வாகுங் கனக சபையிலெழுதுஞ் சித்ரப்
பதம்வெகு வாகும் பவனஞ்செய் தானிந்தப் பாக்கலெல்லாந்
திதம்வெகு வாகச்செய் தான்வந்த விக்கினந் தீர்த்துச்செய்தான்
விதம்வெகு வாகச்செய் தானெங்கள் சொக்க விநாயகனே." 1

"கோடிக்கை மற்றைக் கதைசெய்வங் கோமளக் கோதையர்க
ளாடிக்கை காட்டு மடமாதர் நாரிய ராயிழையார்
பாடிக்கை காட்டுங் கனக சபைதன்னிற் பாக்கலெல்லாம்
வேடிக்கை யாகச்செய் தானெங்கள் கோபுர வேலவனே." 2

"திதிக்கும் சகாத்தமிங் கொன்றரை யாயிரஞ் செல்லறுநான்
குதிக்கும் பிலவத்திற் பங்கூனி மாதத்தி லொன்பதிற்றிற்
பதிக்குங் கனக சபைமண்ட பந்தன்னிற் பாக்கலெல்லாம்
மதிக்கும் படிமுகித் தானெங்கள் மாணிக்க வாசகனே." 3

"தலஞ்சேர் பிலவ வருடப் பங்கூனி தனில்நவத்து
வலஞ்சேர் நற்சனி வாரத்து முல மகிழட்டமிப்
பலஞ்சேர் நாளிற் கனக சபைதன்னிற் பாக்கலெல்லாம்
நலஞ்சே ரவேமுகித் தானெங்க ளாளுடை நாயகனே." 4

"எண்காண் விசைய வருடத் துவக்க விதம்பெறவே
தண்காண் பிலவ வருடப் பங்கூனி தனில்நவமாம்
பண்காண் கனக சபைமண்ட பந்தனிற் பாக்கலெல்லாங்
கண்கான வேமுகித் தாள்யோக நாயகிக் காரிகையே." 5

**கருத்து :**

கனகசபை மண்டபம் மேற்பாகம், ஏற்கனவே தூண்மட்டும் நிறுத்தி முடிவு பெருமலிருந்ததை மேற்பாவுகல் (பாக்கல்) பரவிப் பூர்த்தி செய்த விவரம் இவைகளால் தெரிவிக்கப்பட் டிருக்கிறது. இதைக் கட்டுவித்தவர் தம் பெயரைக் காட்டிக்

கொள்ள அஞ்சி இதனை விநாயகர் திருவருளாலும், கோபுர வேலவர், மாணிக்கவாசகர் திருவருளாலும், ஆளுடைய நாயகர், யோக நாயகியார், திருவருளாலும் கட்டி முடிந்ததேயன்றி என்னுலியன்றதன்று என்று கூறுகிறுர். ஆகவே இது மாணிக்க வாசகர் கட்டி முடித்ததன்று.

இம் மண்டபம் கட்டுவித்ததின் பயன் :

வேடம் போட்டு நடித்து மாந்தர்க்கு நல்லறிவு கொளுத்து தற்பொருட்டும், கதா காலட்சேபம் செய்தற்கும் நாட்டிய மாதர் ஆடுதற்கும், பாட்டுக் கச்சேரி நடத்துதற்கும் ஆகும். இச் செய்தியை இரண்டாம் பாடல் தெரிவிக்கின்றது. இம்மண்டபம் கட்டி முடிக்கப்பெற்ற காலம் கி. பி. 1602 அதாவது இற்றைக்கு 359 ஆண்டுகள் ஆகின்றன.

குறிப்புரை :

இரண்டாம் பாடல் :— கோடிக்கை - வேஷம் போடல். கோடியர் - கூத்தாடுவோர். "கோடியர் நீர்மை போல (புறம்). கோமளக் கோதையர்களாகிய மடமாதர் ஆடிக் கை காட்டும் கனக சபை எனவும், ஆயிழையாராகிய நாரியர் பாடிக் கை காட்டுங் கனகசபை யெனவும், கொண்டு கூட்டுக." இளம் பெண் ஆடுவது அக்காலத்தேயுங் கொள்க. ஆடிக் கை காட்டல் - நாட்டியக் குறிப்பு. பாடிக் (கை காட்டல்) - தம்கை வரிசையை (சாமார்த்தியத்தைக்) காட்டல். வேடிக்கையாக - விளையாட்டுப் போல. மிக எளிதில் அரிய வேலைப்பாட்டை முற்று வித்தான் வேலவன்; உலகைப் படைத் தளித்தல் இறைவனுக்கு விளையாட்டு என்பது போல.

மூன்று நான்கு ஐந்து பாடலிறுதியிலும் முகித்தான் என வந்துள்ளது. முடித்தான், ஒழித்தானென அமங்கலச் சொல் ஆமென்று கருதிப்போலும் முகித்தான் என்று வழங்கியுள்ளது. இது தெலுங்குமொழி.

நான்காம் பாடல் :— பங்கூனி - நீட்டல் விகாரம். பேச்சு வழக்கில் அக்காலத்தில் இருந்திருக்கலாம் போலும். ஆனி அடியிடாதே கூனி குடிப்போகாதே என வழங்கும். ஆனி அஸ்திவாரம் நாட்டலாகாது. பங்குனி மாதம் புதுவீடு குடி போகக் கூடாதென்பது அதன் கருத்து.

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 12, இதழ் 2-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

2. உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரு
மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவண்ணமறுமே.

No pilgrimage in South India is more popular than that to Tiruvannamalai in North Arcot, the temple by a hill celebrated in many poems. Saivism has tried to express the existence of the 'eternal feminine' in deity by giving Siva a lady who not only is His consort, but is actually a part of Him, and is so represented in many images, which show Siva as masculine on one side and feminine on the other.

2. He is our only Lord, conjoined still
 To her whose breast no sucking lips have known.
They who in Annamalai's holy hill,
 Where falling waters noisy chatter down,
And the hill glistens gem-like, bow before
 Our great one who is lord and lady too,
Unfailingly for them shall be no more
 Dread fruit of good and bad deeds they may do.

(to be Continued)

---

Reproduced with the kind permission of Oxford University Press, Calcutta.

(N. B. Copies available for sale at the above Press)

# வழி காட்டும் வள்ளுவர்

வித்துவான். திரு. க. மு. துரைசாமி அவர்கள்,
சென்னை.

ஒரு மனிதனின் மாண்பை அவனது அறிவு, ஒழுக்கம், அனுபவம் ஆகிய மூன்றாலும் நாம் ஒருவாறு அளவிட்டு அறியலாம். ஒருவனிடத்து அறிவு சிறந்தும் ஒழுக்கம் உயரவில்லையாயின் அவன் அத்துணை மேம்படுவதில்லை. அவ்வாறே ஒழுக்கம் உயர்ந்தும் அனுபவம் படியவில்லையாயின் அவ்வொழுக்கத்தால் அவன் அணுவளவும் பயன் பெறுவதில்லை. எனவே அறிவு சிறந்து, ஒழுக்கம் உயர்ந்து, அனுபவம் பெற்ற மனிதனே இவ்வுலகில் பிறரால் மதிக்கப் படுகிறான்.

அறிவு இயற்கையறிவு, செயற்கையறிவு என இருவகைத்து. இயற்கையறிவு அன்னையின் கருவிலேயே அமைவது என்பர் ஆன்றோர். இஃது உண்மையறிவெனவும் படும். செயற்கையறிவு கல்வி கேள்விகளால் பெறுவது. இஃது துணையறிவெனப்படும். இயற்கையறிவைச் சாணைப்பிடிக்காத கல்லெனவும், செயற்கையறிவை அக்கல்லைத்தேய்த்து ஒளிபெறச் செய்யும் சாணையெனவும் பகரலாம்.

மனிதனுக்கு எத்தகைய அறிவு வேண்டும். கல்வி கேள்விகளால் திருந்திய உண்மையறிவே, இம்மலர்தலையுலகத்து இசையுடன் வாழக்கருதும் ஒவ்வொருவனும் விழைவதாகும். ஒவ்வொரு பொருளையும் துருவி ஆராய்ந்து அதன் மெய்த்தன்மையைக் காண்பவனே அறிவென்னும் அரும் பண்பை அடைந்தவனாவன். ஒரு பொருளினது உண்மையை ஆராய்வதில் உலையா ஊக்கமும், சலியா முயற்சியும் கொண்டு அறிவைப் புகுத்துவோனே அவ்வறிவாலாம் பயனை அடைவதற்கு முயலுவோனாவான். விருப்பு வெறுப்பின்றியும், பகை நொதுமலின்றியும்,

உண்மையை உள்ளவாறு உரைக்குமியல்பினனே, ஆராய்ச்சி யறிவு அமைந்தோனுவன். இன்ன பிறவாய நல்லியல்புகள் நண்ணிய நல்லறிவே மனிதனிடம் சிறக்க வேண்டும்.

அறிவு சிறக்கப் பெற்றவனின் மாண்பு யாது? அவ்வறிவு நல்லொழுக்கத்தில் உருக்கொள்ளுவதேயன்றே! இங்ஙனம் நுண்ணறிவு நல்லொழுக்கமென்னும் விழுப்ப நிலையில் ஒளிரா விடின் அச்சீரிய அறிவாலாம் பயனென்கொல்? அவ்வறிவினை வளர்த்த கல்வியும் வீண் மூளைச்சுமையேயன்றே? "கற்றபின் நிற்க அதற்குத் தக" என்றல்லவோ கட்டளையிட்டுப் போந்தார் பொய்யில் புலவரும்.

எத்துணை அறிவு சிறந்திருப்பினும், அவ்வறிவு காட்டுந் துறையில் ஒழுகி அனுபவம் பெருதவன், ஏதேனும் ஒரு வினை நிகழ்த்துங்கால் வழுவி விடுகிருன். அவ்வினையைச் சிறிதே அறிவுடையோன் தனது அனுபவ முதிர்ச்சியினுல் எட்டுணையும் வழுவுதலின்றித் திறம்பட முடிக்கும் திறம் பெறுகிருன். இங்ஙனம் எவ்வழியிலும் ஒழுகி அனுபவ வாயிலாய் உண்மை காண்போனே உலகம் போற்றிடும் உயர்நிலை எய்துகிருன்.

ஒழுக்கந்தவருதவன் அதில் அறிவைக்கலந்து அனுபவத் தைக் காணுது செல்லுவானுயின், அவனது ஒழுக்கத்தைஉயிரிலா இயந்திரச் செய்கைக்கே ஒப்பிடக் கூடும். நல்லறிவாம் நம்பி நல்லொழுக்க நங்கையை மணந்து உண்மையாங் குழவியை உருப்படுத்திக் காணுவிடில் அன்னோர் வாழ்க்கை அவமே என்பதை அறையவும் வேண்டுமோ?

ஆகவே அறிவிற்குப்பயன் விழுப்பந்தரும் ஒழுக்கமென்ப தூஉம், அவ்வொழுக்கத்திற்குப்பயன் அனுபவமென்பதூஉம் போதரும். நாநிலம் போற்றும் நல்லறிவும், சீரியநல்லொழுக் கமும், நல்லனுபவங்களும் வாய்க்கப்பெற்ருேரின் மாண்புதான் என்னே! உலகையே ஒருவழிச் செலுத்தும் ஒண்மை மிதுவன்மை இன்னேரிடம் இயைந்துள்ளதை என்னென்போம்! இவர் வாய் மொழிகள் விலை மதிக்கவொண்ணுதன. உலகமே இவர் மொழி களை ஏற்க ஆவலுறும். ஏற்று அம்மொழிவழிச் செல்ல முயலும். முயன்று இன்பமடையும், அத்தகையோர் உலகில் ஒரு சிலரே

யாம். இவர்கள் இறைவனின் பேரருளால் அவ்வக்காலங்களில் அத்தியெனப் பூக்கின்றனர். இங்ஙனம் தோன்றிய இவர்கள் உலக மக்களுக்கு உயரிய கருத்துக்களையும், நெறிகளையும் தங்கள் சொல்லாலும் செயலாலும் காட்டி மறைகின்றனர். இவர்கள் மறைந்தாலும் இன்னோரின் மறைமொழிகள் என்றும் நின்று நிலவுகின்றன. இங்ஙனம் இம்மன்பதை உலகிற்கு உயரிய வழிகாட்டி தம்புகழ் நிரீஇய சான்றோர் சிலரில் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் தலைசிறந்தோராவர்.

மலர்தலையுலகின் கண் மல்கும் பல்வேறு மொழிகளில் தண்ணார் தமிழ் மொழியும் ஒன்றாகும். இத்தீந்தமிழ் மொழியில் ஒல்காப்பெரும் புகழ்ப்படைத்த புலவர்கள் பலர் தமிழ்நாடெங்கும் புரவலர் போற்ற விளங்கினர். அவர்கள் அனைவரினும் தலை மணியாய் விளங்கியோர் திருவள்ளுவரும், இளங்கோவடிகளும், கம்பரும் என பாரதியார் பகர்கின்றார். இம்மூவரிலும் பல்வேறு மொழியினரும், நாட்டவரும், சமயத்தவரும் போற்றும் மேவருஞ் சிறப்புடையவர் திருவள்ளுவரே யாவர் என்பது சான்றோர் பலரும் ஒப்ப முடிந்த முடிபாகும்.

கன்னித் தமிழ் மொழியின் மாண்பை, மன்பதை எங்கணும் புகழொளி வீசி நிற்கும் வள்ளுவனாரின் வாய்மொழியாம் திருக் குறளை ஒப்பிலா மாணிக்கமென்போம். மனித வாழ்க்கையின் இனிய நோக்கைத் தெளிவு பெறச் சுட்டிக் காட்டும் வழிகாட்டி யென்போம்.

மனித வாழ்க்கையில் அன்பு முதிர்ந்து, அருள் கனிந்து இன்பம் பெருகவேண்டும். ஆனால் இது எல்லோருக்கும் இயல்வ தன்று. மனிதன் சுயநல மென்னும் பேய்வசப்பட்டு அழுக் காறு, அவா, வெகுளி முதலிய தீய சேறுகளில் காலையிட்டுக் கொண்டுத் திண்டாடுகிறான். வாழ்க்கை நெறி வழுவி வாடு கிறான். அவன் அச்சேற்றுப் படுகுழிகளிலிருந்து எழுந்து நன் னெறிச் செல்வதற்கு ஊன்றுகோல் வேண்டுமன்றோ? அவ் வூன்று கோலென்னும் அமுத மொழிகளைத் தமது பேரருளினால் வள்ளுவனார், தீயநெறிகளாம் சேற்றில் சிக்கித் தடுமாறும் மக்களுக்கு வாரி வழங்குகிறார். ஈண்டு இரண்டொன்றை எடுத்துக் காட்டுவாம்.

இவ்வுலகில் தோன்றிய அனைத்துயிரிலும் மேம்பட்ட நிலையுடையவன் மனிதன். "அரிது அரிது மானிடர் ஆதல் அரிது" என்ருர் ஔவையார். இறைவனை உணர்ந்து, இன்பதுன்பங்களைத் துய்த்து செம்மையான முறையில் வாழ்க்கையை நடத்துவது இம்மானிடப் பிறப்பே. இத்தகைய சீரிய மனித யாக்கையிலேயே பகுத்தறிவு சிறக்கின்றது. சிற்சில சமயங்களில் மனிதனின் பகுத்தறிவு தேய்ந்து மங்குவதுண்டு. அக்கால் அவன் தன்னறிவிழந்து பலரும் வெறுக்கும் பகைமை என்னும் பேய் வசமாய் விடுகிருன். தனக்கு இடரிழைத்தவனை அன்பினுல் வெல்லாது மனக்காழ்ப்பினுல் வெல்ல எண்ணுகிருன். சினம் சேர்ந்தாரைக் கொல்லுமென்பது இவன் பகுத்தறிவிற்குப் படாது போகிறது. தனது வலிமையின் செருக்கினுல் மெலியவரைத் துன்புறுத்தத் தொடங்குகிருன். இவனது நெஞ்சில் சினத்தீ மூண்டு அருளென்னும் அரும்பஞ்சை அடியுடன் சாம்பராக்கி விடுகிறது. அருளென்னும் ஆணிவேரைப் பிடுங்கிவிடின் மனிதனின் வாழ்க்கையென்னும் மரம் தழைப்பது யாங்ஙனம்? தன் வாழ்க்கையின் நோக்கத்தைக் குலைக்கும் செருக்கிற்கும், சினத்திற்கும் இடந்தந்தவன் அறிவிலியேயன்ருே? அவன் தன் வாழ்க்கையில் வழிதவறிப் படுகுழியில் வீழ்ந்தவனே யாகிருன். அப்படுகுழியிலிருந்து எழுவதற்கு வழியாது? இதோ நம் பொய்யில் புலவர் பொருத்தமுறக் காட்டுகிருர்.

"வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார் மேற் செல்லு மிடத்து."

இது எத்தகைய சிறந்த வழி என்பதை ஆராய்தல் வேண்டும். செருக்கும் சினமும் மனிதனின் கண்களை மறைத்து விடுவதன்றி அவன் அகத்துறையும் அருளையும் அழித்துவிடுகின்றன. அதனுல் தடுமாறிய மனிதன் தன்னையொத்த உயிரைத் துன்புறுத்தத் தொடங்குகிருன். அப்பொழுது "நாம் வலியின்றியிருந்து வலி மிருந்த வல்லாளனொருவன் நம்மைப் புடைக்க வருவானுயின் நமது நிலையாது? எவ்வாறு அஞ்சுவோம்! என்னென்ன எண்ணுவோம்! எத்தகைய நடுக்கம் நமது உள்ளத்தில் தோன்றும்" என்று ஒருவிநாடி சிந்திப்பானுயின் மறுவிநாடியே அவனது கண்கள் திறந்துவிடு

மன்றே? உடனே அவன் செய்யக்கருதிய செயலே நினைந்து வருந்தி தன் மடைமைக்கு இரங்குவானென்பதில் என்னதடை? வலியார்முன் "தன்னை நினைக்கவே இவ்வுயிர்க்கும் அவ்வாறே அச்சமா மென்றறிந்து அதன்மேல் அருளுடையனும்" என்று வள்ளுவனுரின் உள்ளக்கருத்தைத் தெள்ளிதின் விளக்கும் பரிமேலழகரின் உரைநயம் ஈண்டறியத்தக்கது.

இதோ! இன்னொருவழி! யாருக்கு? செல்வம், வலிமை ஆகியவற்றில் இறுமாந்துவிடும் மனிதனுக்கு. இவன் களிப்பின் மிகுதியால் கண்ணிருந்தும் குருடனேயாகிருன். மகிழ்ச்சிப் பெருக்கில் தன் முன் உள்ளோரைச் சிறு துரும்பெனவே கருது கிருன். தன் கருத்திற்கிசையாதவராயின் அவர்களை வருத்த முனைகிருன். அந்தோ! இவன் கெடுமதி இருந்தவாறென்னே! அவர்களை துன்புறுத்துவதால், அழிக்க முற்படுவதால் இவன் பெறும் பயன் யாது? உள்ளத்தில் தீயஎண்ணம் உருவெடுக்கும் போதே இவன் சேற்றுக்குழியில் காலேயிட்டோனுகிருன். அத் தீய எண்ணம் முழு உருவெடுத்து செயற்படுங்கால் இவன் அச் சேற்றுக்குழியில் விழ்ந்து மீளாவாறு மூழ்கியே விடுகிருன். அச்சேற்றுக் குழியில் மூழ்காது கரையேற வேண்டுமாயின் என்ன செய்யவேண்டும்? வள்ளுவனுரின் வாய்மொழியைக் கேளுங்கள்.

"இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து"

"கெட்டாரையுள்ளவே நாமும் அவ்வாறு கெடுது மென்று" அவனுக்குச் செவியிற் அறைந்தாற்போல அறிவு தோன்றும். உடனே சேற்றிலிட்ட காலே யுதறிக்கொண்டு சேற்றுக்குழியி லிருந்து மீட்சி பெறுவான். வள்ளுவனுர் தடுமாறுகிறவர்களுக்கு எத்துணைச் சிறந்த பயன்தரும் வழியைக் காட்டுகிருர் என்பதை சற்று உன்னிப் பாருங்கள்.

இன்பமே நிறைந்த இவ்வுலகில் துன்பமே காண்பது யார் குற்றம்? மனிதனின் மனக்குற்றமென்ருல் அது பிழையாமா? இவ்வுலகின் கண் பிறந்த மக்கள் ஒவ்வொருவரும் இன்பம் ஒரு பங்கும், துன்பம் ஒன்பது பங்கும் நுகர்வோராய்த் தோன்று

கின்றனர். துன்பத்தின் மிகுதியில் இன்பத்தின் சிறு பகுதி நசுக்குண்டு தேய்ந்து மறைகிறது. அங்ஙனமாயின் மனித வாழ்க்கை துன்பமே நிறைந்த தொலையா வழியா என்னின் அன்று.

மனிதன் வாழ்க்கையெனும் வண்டியிலேறிச் சென்றுக் கொண்டிருக்குங்கால் மேடு பள்ளமற்ற இனிய வழியில் இன்பம் தோன்றுகிறது. கரடுமுரடான தீயவழியில் துன்பம் தோன்றுகிறது. இன்பத்தை ஏற்காமலிருப்பானாயின், துன்பத்தைத் தொலைக்க மனிதன் வல்லவனாகிறான். அஃதியலாதவன் இன்பத்தில் இறுமாந்து, அதுதீர துன்பம் வந்து வருத்துங்கால் துயரங்கொள்ளுதல் இயல்பு. அன்றேல், தன்னை வருத்தும் துன்பத்தை எடுத்தெறிவது யாங்ஙனம்? இதோ வள்ளுவர் கூறுகின்றார்.

" இடுக்கண் வருங்கா னகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்."

எண்ணிலாத் துன்பக் கயறுகள் நமது உடலை வளைத்து வளைத்துச் சுற்றிப் பிணைத்துக் கொண்டிருந்தாலும், நாம் அவற்றைப் பொருட்படுத்தாது நகையென்னும் வாள்கொண்டு துணித்து எறிந்து விடலாம் இந்நுட்ப வழியை எளிய சொற்களில் எடுத்துக் காட்டும் வள்ளுவனாரின் ஆற்றலை, அருந்திறலை எம்மொழி கொண்டு போற்றுவது. நன்னெறியைக் காட்டும் அவரது சீரிய மொழிகள் சிந்திப்போர்க்கு இன்பம் நனி பயப்பன.

மனித வாழ்க்கையின் மாண்பறிய வேண்டின், பொய்யில் புலவரின் பொன்மொழிகளைப் படித்தல் வேண்டும்; கேட்டல் வேண்டும்; சிந்தித்தல் வேண்டும்; அகத்தில் நிறுத்தல் வேண்டும்; நிறுத்தி ஒழுகல் வேண்டும்; ஒழுகி உண்மை காணல் வேண்டும். வாழ்வின் நல்வழி காட்டும் வள்ளுவரை பின்பற்றுவோனே இவ்வுலக வாழ்க்கையில் நன்னெறிப் பற்றியோனாவான்.

வாழ்க வள்ளுவர். வாழ்க வான்மறை.

வாழ்க தமிழ் நாடு.

---

# ஸ்ரீ சொக்கநாதர் திருவருட்பா

மாணிக்கவாசகன்
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி முதல்வன்

[மலர் 12, இதழ் 2, பக்கம் 163-இன் தொடர்பு]

## கட்டுரை 3

திருக்கோயிலிலோ தம் வீட்டில் வழிபடும் தூய நல்லிடத்திலோ வேறிடத்திலோ கடவுளை வரம் வேண்டும் அன்பர் பலர், அழியும் பொருளை வேண்டிக் கேட்பர். அதனுல் மீண்டும் இடர்ப்பாட்டுக் குள்ளாவரே அன்றி நிலைத்த இன்பம் பெருர். உலகம் யாவும் மாயையிலிருந்து உண்டாவனவே. அவை உயிர்க்குத் தனுகரண புவனபோகங்களாகிய நால்வகையுட்படும். புவனங்களெல்லாம் பலபல அண்டத்தில் உள்ளன. போகங்கள் உயிர்க்குப் போகமான இன்பத்தையும் துன்பத்தையும் ஊட்டும் சாதனப் பொருள். தனுகரணம் உடம்பும் உடம்பில் உள்ளவையும் ஆகும். இச்சை, ஞானம், கிரியைகளை நிகழ்த்தும் உட்கருவிகள் கரணங்களாகும். போகசாதனம் என்பனவே அவை. அண்டப்பரப்பெல்லாம் மாயாகாரியமே. மாயை திரோதான சத்தியால் தொழிற்படுவது. திரோதான சத்தி சிவசத்தியின் பல கோடி கூறுகளுள் ஒன்ருகும். அவ்வாற்ருல் சிவசத்தியின் படைப்பே மாயாகாரிய உலகெல்லாம். அம்மாயாகாரியப் பொருள்களுள் ஒன்றனையும் நாம் கேட்கும் வரத்தில் அடங்கலாகாது. நம் வினைப்பயனுகத், திருவருள், நமக்கு வேண்டும் மாயாகாரியப் பொருள்களைத் தானே கூட்டுகின்றது. நாம் கேட்டுப் பெறவேண்டும் பொருள் அல்ல அவை. அவை அவரவர் வினைக்குத்தக்க திருவருளே கூட்டும் பொருள்கள். அதனுல்,

“மன்னிய அண்டப் பிரப்பெலாம் வகுத்த
வள்ளல்நீ அப்பொருள் ஒன்றும்
வரியனேன் நின்னை இரந்திலன்”

என்ருர் ஆசிரியர். அவை வேண்டாதேன் அல்லேன்; நான் நின்னை வேண்டி அவற்றைப் பெறற் பாலனேன் தான். அதில்

ஐயம் இல்லை. இக்கருத்து விளங்க 'வறியனேன்' என்றார். எனினும், 'வறியோர்க்கு அழகு வறுமையிற் செம்மை' ஆதலின் உன் திருவடிமலர்கள் இரண்டனையும் மறவாது வழிபடும் அறிவே அடியேனுக்கு உண்டாக அருள் புரிதல் வேண்டும். என்று அவ்வரமே வேண்டினார். அழியும் பொருளை வேண்டிலர். அவ்வரத்தை அருளினால், எல்லா இன்பமும் என்வசமே ஆய் விடும், என் அப்பனே, உனக்கு ஒருகண்ணுக்கு மூன்று கண் இருந்தும், என்பால் இவ்வாறு பராமுகமாக இருத்தல் அழகாமோ? கண்ணோக்கம் அருளப்பஞ்சமோ?

தனக்குத் தானே ஒப்பாகிய தத்துவத்தியல்பே, சொல் லற்கு அரிய நல்ல குணமேருவே, அடியேன் துயரத்தை அகற்றவல்ல துணையே, பிறவிக்கடலைக் கடக்கச் செய்யும் (பேருணர்வாம்) புணையே, சொக்கநாதா, சிற்சுகோதயமே, இவ்வணம் செய்வது உனக்கு அழகோ? இதை உளங்கொண்டு பாட்டைப் பாடுங்கள்.

"மன்னிய அண்டப் பரப்பெலாம் வகுத்த
வள்ளல்நீ அப்பொருள் ஒன்றும்
வறியலேன் நின்னை இரந்திலன் நின்தாள்
மலர்த்துணை மறந்திடா மதியே
என்னிடம் உளதா அருள்வையேல் எல்லா
இன்பமும் என்வபம் அன்றோ?
எந்தையே முக்கண் இருந்தும்என் அளவில்
இவ்வணம் புரிகுதல் அழகோ?
தன்னிகர் இல்லாத் தத்துவ நிலையே,
சாற்றருஞ் சற்குண மலையே,
தமியனேன் துயரம் தகர்த்திடும் துணையே,
ஜனனவா ரிதிக்கொரு புணையே,
செந்நிற மணியின் நிரைதிரை கொழிக்கும்
செழியநீர்க் காவிரி சூழும்
சிகரிசேர் தருமை வளர்சொக்க நாதா
செல்வமே, சிற்சுகோ தயமே." (3)

சிவஞானதேசிகர் திருவடி வாழ்க.

(தொடரும்)

---

# குரு பக்தி

வித்துவான். திரு. ம. சிவசம்பு அவர்கள்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்து முதற் குரவ ராகிய ஸ்ரீ குருஞான சம்பந்தர் தனது ஞான தேசிகராகிய கமலை ஞானப் பிரகாசரிடம் எல்லை இல்லாத அன்பு கொண்டவர். இவருடைய குருபக்தியின் சிறப்பை அளவிட்டுச் சொல்ல முடியாது. ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும் ஏதேது சிந்தித்து இருந்தாலும் எல்லாம் குருவருளே என்ற எண்ணம் உடையவர். இருந்தாலும், எழுந்தாலும், நடந்தாலும். பசி வந்தாலும், பிணி வந்தாலும், அந்தகன் தொடர்ந்தாலும் 'ஞானப் பிரகாசர்' என்ற சொல்லைத் தவிர வேறு சொல்லைச் சொல்ல மாட்டார்.

'கிடந்தாலும் ஞானப்பிரகாச னென்பேன் கிடந்தே எழுந்து
படர்ந்தாலும் ஞானப்பிரகாச னென்பேன்பசி யோடு பிணி
அடர்ந்தாலும் ஞானப்பிரகாச னென்பேன் அந்த அந்தகனுர்
தொடர்ந்தாலும் ஞானப்பிரகாச னென்பேன் பினைச் சொல்இல்லையே'

என்ற அவரது வாக்கால் அறியலாம்.

இவர் குருவருள் பெற்றவரே திருவருள் பெற முடியும் என்ற கருத்துடையவர். ஞானப் பிரகாசன் இறைவனே என்ற நம்பிக்கை உடையவர். திருவாரூரில் ஞானப்பிரகாசரைக் கண்டவுடன் இவருக்கு இன்பம் உண்டாயது. அவரது பேச்சு இவருக்கு இனித்தது. ஞானப்பிரகாசரின் அடியவர் என்று சொல்லிக் கொள்வதில் இவருக்குப் பெருமகிழ்ச்சி. இக்கருத் துக்களை எல்லாம் இவர் பாடிய சிவபோக சாரம், ஞானப்பிரகாச மாலை, நவரத்னமாலை, சில தனிப்பாடல்கள் மூலம் அறிகிறோம்.

**குருவே சிவம் :**

குருவைக் கடவுளாகக் கருத வேண்டுமே அல்லாது மனிதனுக எண்ணுவது கூடாது. குருவை மனிதனுக எண்ணுவது பாவம். குருஞானசம்பந்தர் தன் குருநாதரைச் சிவமாகவே எண்ணி வழிபட்டார். திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் என்று சொல்லுவதற்குச் சான்ருக, இவர் கயிலை வாசனுகிய இறைவனே மதி, மான், மழு முதலியவற்றை மறைத்து ஞானப்பிரகாசனுகி இருக்கிருர். அவரே என் பாசங் கெடுத்துப் பசுத்துவம் போக்கிப் பராபரத்தில் நேசங் கொடுத்து நிறுத்தினுர் என்று கூறுகிருர்

"பாசங் கெடுத்துப் பசுத்துவம் போக்கிப் பராபரத்தில்
நேசங் கொடுத்து நிறுத்தினனே நீண்ட தோர் கயிலை
வாசன் செழுமதி மானு மழுவு மறைத்து வந்த
தேசிகன் கமலையுள் ஞானப்ர காசநந் தேசிகனே".

(ஞானப்பிரகாச மாலை-30)

மேலும் ஞானப்பிரகாசரை 'கூடலில் வாழ் ஞானசம்பந்த போதகனே'—என்கின்ருர். அரி, அயனும் காணு அடி முடியுடைய இறைவனே ஆருரில் ஞானப்பிரகாசனுகி வந்து ஞான நிட்டை பெருக்குகிருன். அவன் மாமறையும் ஆகமும் சாற்றியவன். வானப் பிறையணிந்தவன். உற்ற பிரபஞ்சமெல்லாம் ஆட்டியவன். மன்றில் நடமாடியவன். அருவும் உருவும் அருவுருவும் இல்லா ஒருவன். அவன் சித்திதருநாதன், தென்கமலை வாழ் நாதன், பக்தி தருநாதன், பரநாதன், முத்திப் பெருநாதன், உண்மை தருநாதன், அவன் என் குருநாதன், என்றெல்லாம் சிவபோகசாரத்தின் மூலம் நமக்கு அறிவிக்கிருர். ஒரு நூல் தொடங்குமுன் அந்நூலை இனிது முடித்தற் பொருட்டு ஏற்புடைக் கடவுளையாவது, வழிபடு கடவுளையாவது பாடுதல் மரபு. ஆனுல் குருஞானசம்பந்தர் முத்தி நிச்சயத் தொடக்கத்தில் கடவுள் வணக்கப் பாடலாக தன் குருநாதரைப் பாடுகிருர்.

"சீர் மேவும் ஆருர்ச் சிதம்பர நாதனெனும்
பேர் மேவு ஞானப்பிரகாசன் — தார் மேவு
சேவ டிகள் போற்றித் திகழ் முத்தி நிச்சயமொன்
ருவ தென மொழி வேன் யான்."

(முத்திநிச்சயம் - 1)

குருவைக் கடவுளாக, சிவமாக வழிபட்டதற்கு வேறு சான்று வேண்டுமோ ?

### குருவே எல்லாம்.

மாணிக்கவாசகர், இறைவனைப் பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து அருள் செய்பவன். 'தாயுட் சிறந்த தயாவான தத்துவன்' என்கிறார். குருஞான சம்பந்தர் குருவே தாய், தந்தை, தெய்வம் எல்லாம் என்கிறார். மக்கட்கு மாதா, பிதா, குரு, தெய்வம் இந்நான்கும் துணை என்பர். அடியேனுக்கு இந்நான்கும் உன்பாதரவிந்தமே என்கிறார்.

"மாதா பிதா குருதெய்வந் துணையென்பர் மக்கட்குன்றன்
பாதார விந்த மடியேற்கந்நான் கெனப்பற்றிடு"

(ஞானப்பிரகாசமாலை–22)

"தாயே கமலையுள் ஞானப்பிரகாச"— (15)

என்ற வரிகள் இக்கருத்தை நன்கு விளக்குகின்றன.

### குரு தரிசனம்.

செந்தமிழ்ச் சொக்கர் உணர்த்தியபடி குருஞானசம்பந்தர் ஆரூர் வந்தார். திருவாரூர் சித்தீச்சுரத்தில் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் ஞானப்பிரகாசரைக் கண்டார். காந்தம் கண்ட இரும்பு போல் மனம் அவற்பாற் சென்றது. அருகில் சென்றார். விழுந்து வணங்கினார். சூரியனைக் கண்ட இருள்போல் இவருடைய மாயையாகிய இருள் அகன்றது. அருள் பிறந்தது. இன்பம் பெருகியது. பேரின்பம் தலைப்பட்டது.

"கண்டேன் பாசங்கழிந்தேன் அமுதை முகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன் – வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்பிரகாசனையே நான்"

(சிவபோகசாரம்-5)

### குருவின் சொல்.

வணங்கிய குருஞான சம்பந்தரை ஞானப்பிரகாசர் அழைத்தார். பேசினார். குருஞானசம்பந்தர் மெய்மறந்து நின்றார். குருநாதரின் பேச்சு அவருக்குத் தேனாக, கற்கண்டாக இளநீராக, கட்டித் தயிராக, சீனியாக, கரும்பாக, ஆன்பாலாக அவற்றினும் மேலாகத் தித்தித்தது.

"வான்பார் கமலைத் திருஞான சம்பந்த மன்னனெங் கோன்
ஊன்பார் உடற்பவ நீக்கிடவோ மொழியோர் வசனந்
தேன்பாகு கற்கண்டிளநீர் அலைமுறி சீனி கன்னல்
ஆன்பாலி னுந்தித்தித் தூற்ருய்ப் பெருகல் அதிசயமே."

ஞானப்பிரகாசரைக் கண்டால் இன்பம். அவர் சொற் கேட்டால் இன்பம். அவர் சொற்படி நடந்தால் இன்பம். ஞானப்பிரகாசர் சொற்படி நிற்க, குருஞான சம்பந்தருக்கு ஆனந்தம் எங்கும் தலைப்பட்டது. இது ஒருநாள் நடந்தது. இந்த அற்புதம் சொல்ல முடியாத ஒன்ருகும்.

" கருணுகரன் புகழாகரன் எங்கள் கமலையில் வாழ்
திருஞானசம்பந்த தேசிகன் சொற்படி சென்று நிற்க
ஒருநாள் நிகழ்ந்தது சொல்லவற் ருேநின் றுயிர்ப்பறவே
தருகாய மின்றி யொர் ஆனந்தம் எங்குந் தலைப்பட்டதே.

## ஞானவாள் பெற்றது:

குருஞானசம்பந்தர் ஞானப்பிரகாசரிடம் திருவருள் பெற்றதை ஞானவாள் பெற்றதாகக் கூறுகிருர். திருவருளை ஞான வாளாக உருவகம் செய்வது நம் அடியார்கள் இயல்பு. மாணிக்க வாசகர் திருப்படை யெழுச்சியில் முதல் பாடலில் "ஞானவாள் ஏந்தும் ஐயர் நாதப் பறையறைமின்" - என்கிருர். ஞானவாளைப் பெற்ற நான் யாருக்கும் அஞ்சேன். எமனுக்கும், பிரம்மாவுக்கும், கண்ணனுக்கும் அஞ்சேன். என்னை யாரும் எதுவும் செய்யமுடியாது என்கிருர்.

"நற்பதஞ்சேர் ஆருரின் ஞானப்பிரகாச னெந்தை
தற்பரனேர் ஞானவாள் தந்தானே — சொற்பனத்தும்
காரார் மறலி அயன் கண்ணனுக்கும் அஞ்சேனை
யாராலும் என் செய்யலாம்." சிவபோகசாரம்-49.

## குருவார தரிசனம்:

இவர் ஞான ஆசிரியனைச் சிறிதும் பிரிந்திருக்க விரும்பாதவர். சிறிது பிரிந்தாலும் வருந்துகின்றவர். வானத்திலே எழுகின்ற சந்திரனைக் காணுத சகோரப் பறவைபோல இவர் மனம் வருந்தினர். இக்கருத்து.

" வானயேழுமதி காணுச் சகோர மனமதுபோல
ஆனே னின்சந்நிதி யெப்போதுங் காணவருள்புரியே"
(ஞானப்பிரகாசமாலை-33)

என்று வேண்டுவதன் மூலம் தெளிவாகிறது. இவ்வாறு வேண்டிய குருஞான சம்பந்தருக்கு குருவாரந்தோறும் தம்மைக் காண அனுமதி தந்தார் ஞானப்பிரகாசர். குருவாரந்தோறும் சென்று தரிசித்தார் ஞானசம்பந்தர். ஒருநாள் தரிசிக்கச் சென்றுர். ஞானப்பிரகாசர் சிவசாயுச்சியம் பெற்றிருந்தார். பிரிவாற்ருமல் வருந்திஞர்.

" குருவாரந்தோறும் வந்துனைப் போற்றவும் கூறியசொற்
கருளே நின்காயத்தை நீக்கினையே அடியன் தனக்கு
ஒரு வாசகமின்றி யுன்னைப் பிரிவதுனக் கழகோ
திருவாசகமுறை ஞானப்பிரகாச சிகாமணியே"

ஞானப்பிரகாசர் அருள்பெற்ருர் நிலை.

ஞானப்பிரகாசர் அருள் சற்றும் பிரியாத அடியவர்கள் நல்லவர்கள். பொல்லாத தீவினையில் போகமாட்டாதவர்கள். எல்லாம் சிவன் செயல் என்று இருப்பவர்கள். பதி, பசு, பாசத்தின் உண்மையை அறிந்தவர்கள். சிந்தாந்த முத்தியில் நிற்கக் கூடியவர்கள். ஆகவே மக்களே நீங்கள் தவம் செய்ய வேண்டாம். ஞானப்பிரகாசன் அடியவன் என்று பேர் பெறுங்கள். அது போதும். பிறப்பு அற்றுவிடும். நரகம் இல்லை. வீடு பேறு கிடைக்கும். இது உறுதி என்கிருர்.

" திருவார் கமலையுள் ஞானப்பிரகாசன் திருவடிக்கீழ்
வருவா ரவர்வழி வாரான் சமனு மலரயனுங்
கருவா யிடுவதற் கென்று னெந்நாளுங் கருத்தினில்நீ
வெருவாய் சுகத்தினில் வாழ்வாய் பரானந்தமேவிடுமே"

குருபக்தியால் சிறந்த குருஞான சம்பந்தரையும் அவர் வழிவந்த குருமகா சந்நிதானங்களையும், அடியவர்களையும் போற்றி வணங்கி அருள் பெற்று உய்வோமாக. வளர்க குருபக்தி! ஓங்குக ஞானம்!

---

# எல்லாம் ஒன்று? இல்லை

**திரு. ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்கள்,**
திருவாவடுதுறை ஆதீன சமயச் சொற்பொழிவாளர்,
அம்பாசமுத்திரம்.



**உ**லகத்தில் பேசப்படும் பொருள்கள் மூன்று வகைப்படும். ஒன்று முழு அறிவுடைய பொருள். மற்றொன்று அறிவும் அறியாமையும் உடைய பொருள். இவைகள் இரண்டும் தவிர மற்றொன்று, அறிவேயில்லாத பொருள்.

இவைகளில், அறிவே இல்லாத பொருள் உலகமெனப்படும். உலகம் ஐந்து பூதங்களால் ஆயது. அவைகள் ஒன்றொற்கொன்று வேற்றுமையுடையன. ஆகாயம், காற்று, தீ, தண்ணீர் மண். இவைகளில் ஆகாயம், ஒரு குணம் உடையது. காற்று, இரண்டு குணம் உடையது. தீ, மூன்று குணம் உடையது. நீர் நாலு குணம் உடையது. மண் ஐந்து குணம் உடையது.

இந்த உண்மையைத், தத்துவ ஞானிகள் அறிவால் உணர்வார்கள். சிவஞானிகள் அநுபவத்தால் காணுவார்கள். தத்துவ ஞானம், மெய்ஞ்ஞானத்தில் அடங்கும். மெய்ஞ்ஞானம், தத்துவ ஞானத்தில் அடங்காது.

சிவஞானியான, மாணிக்கவாசக சுவாமிகள் பூதங்களின் குணங்களை விளக்கியுள்ளார்.

"வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி."

(வெளி - ஆகாயம். வளி - காற்று.)

ஆகவே பூதங்களின் குணங்கள், ஆற்றல்களால், அவைகள் ஒன்ருக மாட்டா. அவைகள் ஒன்றிற்கொன்று ஏற்றத்தாழ்வு உடையவைகள். அதுபோலவே உலகத்திற் காணப்படும் நவமணிகளும், மரம், செடி, கொடிகளும், பழங் களும் எல்லாம் வேற்றுமை உடையன. இதை உணர்த்தத், தெய்வப்புலவர் திருவள்ளுவர்,

"எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."

என்ருர்.

மெய்யுணர்வும், தத்துவ அறிவும் கைவரப்பெற்ற பெரு மக்கள், உலகத்திற் காணப்படும் அசையாப் பொருள்கள், அறி வில்லாத பொருள்கள் தரத்தில் ஒன்ருகாது, பலவகைப்படு மென்பர். அவைகளில் ஒவ்வொன்றிலும் ஒன்று சிறந்து விளங் கும். அதனுல் எல்லாம் ஒன்ருகாது.

உயிர்கள்:

உலகத்தில் உயிர்களைப் பற்றியுள்ள ஆராய்ச்சிகள் எண் ணிறந்தன. உயிர்கள் அறிவும் அறியாமையும் உடையன. என்றும் அழியாதன. உயிர்களின் அறியாமை நீங்க, அவை களைத் தோற்றுவிக்கப்படுகின்றன. அவைகள் நின்று, மறைந்து, அழிந்து, மறுபடியும் தோற்றுவிக்கப்படுகின்றன. இறைவன் அருளால், உயிர்களுக்கு இவைகள் நடைபெறு கின்றன.

உயிர்களின் தோற்றம் நால்வகைப்படும். அவைகளாவன: 1. வித்து வேர், 2. வியர்வை, 3. முட்டை, 4. கருப்பை. உயிர் களின் பிறப்பு ஏழுவகைப்படும். அவைகளாவன 1. தாவரங்கள், 2 ஊர்வன, 3. தேவர்கள், 4. நீர்வாழ்வன, 5. பறவை, 6. மிரு கம் 7. மானுடர். இவைகள் எல்லாம் சேர்ந்து, எண்பத்துநான்கு நூருயிரம், யோனிபேதங்கள். (யோனி — வடிவம்)

இந்தத் தோற்றங்களை, மாணிக்கவாசக சுவாமிகள், திரு வாசகத்தில் அருளியுள்ளார். அஃதாவது சிவபுராணத்தில்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி
முதல்... ... .... .... .... ...
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என்பது வரையுள்ள அருள் வாக்குகளால் உணரலாம்.

ஆகவே, மேலே கூறப்பட்டுள்ள பிறப்புக்களில் ஒவ்வொன்றிலும் ஓர் உயிர் சிறந்து விளங்குகிறது. மக்கள் பிறப்பிலும், ஞானத்தால், அறிவால், பண்பால், குணத்தால், வேறுபாட்டைக் காணுகிறோம் ஞானிகளின் வாழ்விலும், ஏற்றத் தாழ்வை காணுகிறோம். இதனால் உயிர்கள் எந்தப் பிறவியிலும், நிலையிலும் எல்லாம் ஒன்றாக இல்லை. அவைகளின் தன்மைக் கேற்ப உயர்வு, தாழ்வு, வேற்றுமைகள் உள்ளன. உயிர்கள் எல்லாம் தரத்தில் ஒன்றாக மாட்டா. இந்த உண்மையைத் திருவள்ளுவர்,

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தம்தம்
கருமமே கட்டளைக் கல்" என்றார்.

கடவுள்: இவைகளுக்கெல்லா நிமித்த காரணமான முழுமுதற் கடவுள் சிவம் அது சித்துப்பொருள், சத்துப்பொருள். முழுஅறிவுடைய பொருள், தனக்கு ஒப்பாரும், மிக்காரும் இல்லாத தனிப்பொருள். பிறப்பு, இறப்பில்லாத பெம்மான். தத்துவங்கள் கடந்த தனிப்பரசிவம். அருளே திருமேனியாக வுடையவன். இந்த உண்மையை தவமுதல்வர்கள், சிவஞானிகள் உணர்வார்கள்.

அதனால் சமயக்குரவர்கள் நால்வர்களும் தத்துவங்களுக் குட்பட்ட எந்த மூர்த்திகளையும் பாடிற்றிலர். அவர்கள் "சிவமொன்றையே" துதித்த இரகசிய வுண்மை, சைவசமயிகளாற் பெரிதும் போற்றற் பாலதாம். கடவுள் ஒருவரே. அவரும் பரசிவமே ஆவர்.

இந்த உண்மையை உலகத்தில் மக்களுக்கு உணர்த்த அவதாரம் செய்தவர் மாணிக்கவாசக சுவாமிகள். அவர்கள்

சிவபெருமானைக் கண்ணாரக் கண்டவர்கள். திருவருள் பெற்றவர். அறிவாற் சிவமே ஆவர். சிவனடியே சிந்திக்கப் பெற்றவர். அவருக்கும் ஒப்பாரும் மிக்காரும் இலர்.

மாணிக்கவாசக சுவாமிகள், திருவடி பற்றி நிற்கும் புண்ணியம் அடைந்தவர்கள், சிவபெருமானே முழுமுதற் கடவுளென வழிபட்டு உய்வார்கள். மற்றத் தெய்வங்களை இகழவு மாட்டார்கள். மற்றத் தெய்வங்களை, சிவபெருமானுக்கு ஒப்பாகப் பேசவுமாட்டார்கள். சிவபெருமான், தனக்கு வமையில்லாத செம்பொருள்.

"அரவணையான் சிந்தித் தரற்றும் அடி
அருமறையான் சென்னிக் கணியாம் அடி
சரவணத்தான் கைதொழுது சாரும் அடி
சார்ந்தார்கட் கெல்லாஞ் சரணம் அடி
பரவுவார் பாவம் பறைக்கும் அடி
பதினொன் கணங்களும் பாடும் அடி
திரைவிரவு தென்கெடில நாடன் அடி
திரு வீரட்டானத் தெஞ்செல்வன் அடி."

— (அப்பர் சுவாமிகள்)

உண்மைக்கு மாருகப் பேசக்கூடாதென அறிவிப்பது.

"எல்லா முணர்ந்தும் வியாத னியம்பியச்
சொல்லாலே நாவயர்ந்தான் சோமேசா — வல்லமையால்
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

— (சோமேசர் முதுமொழி வெண்பா)

ஓம் சிவ சிவா.



உ

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’



| | | ரூ. ந. பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | ... 6 00 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... 3 00 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) அச்சில் | ... |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, | ... 1 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ,, | ... 0 50 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு (மூலம்மட்டும்) | ... 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, | ... 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | ... 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலம் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... 1 00 |
| | டி 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் [அச்சில்] | | |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷ ஷ பொருட்பால் | ... | 2 75 |
| 54 | ஷ ஷ காமத்துப்பால் | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 56 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
*"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.*

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '61.